சுதமதி நல்லாண் மதிமுக நோக்கி
கரு யீங்கு நின்றீ ரென்னுற் றீரென
வாங்கவ ளாங்கவன் கூறிய துரைத்தலு
மரசிளங் குமர னாயிழை தன்மேற்
றணியா நோக்கந் தவிர்ந்தில னாகி
யறத்தோர் வனமென் றகன்றன னாயினும்
உ0 புறத்தோர் வீதியிற் பொருந்துத லொழியான்
பெருந்தெரு வொழித்துப் பெருவனஞ் சூழ்ந்த
திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்க மாதவர் விரும்பின ருறையுஞ்
சக்கர வாளக் கோட்டம் புக்காற்
உரு கங்குல் கழியினுங் கடுநவை யெய்தா
தங்குநீர் போமென் றருந்தெய்வ முரைப்ப

கரு. நின்றீரென்றது, மணிமேகலையையும் உளப்படுத்தி. என்னுற்றீர் - யாது துன்பமுற்றீர். என - என்று மணிமேலாதெய்வம்கேட்ப.

க0 - கரு. மேனியள், ஏத்தி ஆகி நோக்கி என்னுற்றீரெனவென்க.

கசு. அவள் - சுதமதி. அவன் - உதயகுமரன். கூறியது - 'சித்திராபதியாற் சேர்தலு முண்டு' (ரு: அஉ) என்றது.

கஎ. ஆயிழைதன்மேல் - மணிமேகலையிடத்து.

கக. அறத்தோர் வனமென்று - முனிவர்களுறைகின்ற வனமென்று

உ0. புறத்தோர்வீதியில் -புறத்திலுள்ளவர்களுடைய வீதியினிடத்தே.

கஎ - உ0. குமரன் தவிர்ந்திலனாகி அகன்றனன்; ஆயினும் வீதியிற் பொருந்துதலொழியானென்க.

கக - உ0. மணி. ரு: ருசு - எ.

உக. பெருநதெருவென்றது, முன்புகூறிய புறத்தோர்வீதியை.

உஉ. மு. மணி. எ: அக. எயில -மதில். குடபாற் சிறுபுழை - மேற்றிசையினிடத்தேயுள்ள சிறிய நுழைவாயில்.

உங - ச. மணி. கரு: நக - உ; கஎ: எரு - கூ; உஉ: ரு - கூ.

உரு. கடுநவை - உதயகுமரனாற் பற்றப்படுகை.

உசு. அங்கு - சக்கரவாளக்கோட்டத்திடத்தே.

கசு - உசு. அவள் உரைத்தலும், அருந்தெய்வம், 'அரசிளங் குமரன் பொருந்துத லொழியான் ; ஆதலாற் போகிப் புக்காற் கடுநவை யெய்தாது ; நீர் அங்குப்போம்' என்றுரைப்பவென்க.

(பி - ம்.) கச. 'நலலாடன்முகம்' கஅ. 'தவிர்விலனாகி', 'தணிந்திலனாகி' கக. வனமென...னாயினும்' உக. 'ஒழித்துப்பெருவளஞ்' உரு - கூ. எய்தாவங்குநீர்போமெனவருந'

வஞ்ச விஞ்சையன் மாருத வேகனு
மஞ்செஞ் சாய னீயு மல்லது
நெடுநகர் மருங்கி னுள்ளோ ரெல்லாஞ்
௩௦ சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
சக்கர வாளக் கோட்ட மஃதெனை
மிக்கோய் கூறிய வுரைப்பொரு ளறியே
னீங்கிதன் காரண மென்னை யோவென
வாங்கதன் காரண மறியக் கூறுவன்
௩௫ மாதவி மகளொடு வல்லிருள் வரினு
நீகே ளென்றே நேரிழை கூறுமிந்
நாமப் பேரூர் தன்னொடு தோன்றிய
வீமப் புறங்கா டுங்கித னயல
தூரா நற்றே ரோவியப் படுத்துத்
௪௦ தேவர் புகுதரூஉஞ் செழுங்கொடி வாயிலு
நெல்லுங் கரும்பு நீருஞ் சோலையு
நல்வழி யெழுதிய நலங்கிளர் வாயிலும்
வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்
துள்ளுரு வெழுதா வெள்ளிடை வாயிலு
௪௫ மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கிற்

---

௩௧. அஃது சக்கரவாளகோட்டமென்று.

௩௩. என்னையோவென - யாதென்று சுதமதி கேட்ப.

௩௪. கூறுவல் - கூறுவேன்.

௩௫ - ௬. மாதவிமகளொடு நீ கேள். நேரிழை - மணிமேகலாதெய்வம்.

௩௮. ஈமப்புறங்காடு - மயானம்; ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு, “கரிபுற விறகி னீம வொள்ளழல” (புறநா. ௨௩௧.) இதன் - இந்த உவவனத்தின். புறங்காடு இதன் அயலிடத்துள்ளது.

௩௯. ஊராநற்றேர் - விமானம். ஓவியப்படுத்து - சித்திரம்போல ஆகாயத்தே நிற்கும்படி செய்து.

௪௩. வெள்ளிவெண்சுதை - மிக்க வெண்மையையுடைய சுண்ணச் சாந்து. இழுகிய - பூசிய.

௪௪. உரு - வடிவங்கள். வெள்ளிடை - வெளியான இடம்.

௪௫. கடுத்தநோக்கு - கோவித்துப்பார்த்த பார்வை.

(பி - ம்.) ௨௮. ‘சாயநீயும்’ ௩௧. ‘கோட்டமீதெனை’ ௩௩. ‘எனைகொலோவென’ ௩௮. ‘ஈமப்பெருங்காடு’ ௩௯. ‘ஓவியகப்படுதது’ ௪௨. ‘நலலவழியொழுகியநலங்’ ௪௩. ‘எழுதியமாடத்’

றொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து
நெடுநிலை மண்ணீடு நின்ற வாயிலு
நாற்பெரு வாயிலும் பாற்பட் டோங்கிய
காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை
டு0 யுலையா வுள்ளமோ டுயிர்க்கட னிறுத்தோர்
தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிப்
பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றிற்

சசு. தொடுத்த பாசம் - பிறரைக் கட்டிய கயிறு; மணி. க: உரு.

சஎ. நெடு நிலை மண்ணீடு - நீண்ட தோற்றத்தையுடைய பூதவடிவம்; என்றது மயானத்தைப் பாதுகாப்பதொரு தெய்வவிசேட வடிவமென்பர். மண்ணீடென்பதற்குச் சுதையாற் செய்யப்பட்ட பாவையென்று பொருள்; "பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து" (சு : உ00), "ஈங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கேன்" (கஅ: கருசு) என இந்நூலுள்ளும், "கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்" (ரு: ௩0) எனச் சிலப்பதிகாரத்துள்ளும் வருதல் காண்க. மண் - சுதை; "மண்மாண் புனைபாவை யற்று", "மண்ணே டியைந்த மரத்தனையர்" (குறள். ௪0எ, ருஎசு)

சஅ. நாற்பெருவாயிலும் - செழுங் கொடிவாயிலும் நலங்கிளர்வாயிலும் வெள்ளிடைவாயிலும் நின்றவாயிலுமாகிய நான்கு பெரியவாயிலும். பாற்பட்டு - பகுதிப்பட்டு.

சக. காப்பு - காவல். கடி வழங்கு ஆரிடை - பேய்கள் சஞ்சரிக்கின்ற அரிய இடம்; என்றது மயானத்தை.

சஅ - கூ. ஓங்கிய ஆரிடையென்க.

டு0. உலையாவுள்ளமோடு - தளராத உள்ளத்தோடு, உயிர்க்கடனிறுத்தோர் - உயிராகிய கடனைக்கொடுத்தோர்; உயிர்க்கடனிறுத்தலை, சிலப். ரு: அஎ - அ ஆம் அடிகளின் உரையிற்காண்க. இவர்களை, மயானவாசினியது மந்திரஸாதகரான பைரவவேஷதாரிகளென்றும், காபாலிகமதத்தினரென்றும் கூறுவர்; இஃது அவிப்பலியெனப்படும்; "சிரந்தெரிந்தன வரிந்த ரிந்துகுவை செய்த வீரர்கள் செந்நிலம், பரிந்தெ ரிந்துபொடி செய்ய மற்றவை பரிப்ப மற்றவர் சிரிப்பரே" தக்க. காடுபாடியது.

டுக. தலைதூங்குநெடுமரம் - உயிர்க்கடனிறுத்தோருடைய தலைகள் தொங்கப் பெற்ற நீண்ட மரங்கள். பலிகொடுப்போர் சிகையை மரத்தில் முடிந்துவிட்டுத் தலையையரிந்து துர்க்கைக்குப் பலிகொடுத்தல் மரபாதலால், இங்ஙனங்கூறினார். "வீங்குதலை நெடுங்கழையின் மிசை தோறுந் திசைதோறும் விழித்து நின்று, தூங்குதலை சிரிப்பனகண் டுறங்குதலை மறந்திருக்குஞ் சுடர்க்கட் கூர்ப்பேய்" (கலிங்க. கோயில். உக.) இது போன்ற ஒழுக்கம், வடநூலில் தசகுமாரசரிதத்தில் உபகாரவர்மாவின் சைசவவிருத்தாந்தத்திற் சொல்லப்பட்டுள்ளதென்பர்.

டுஉ. பீடிகை - பீடம். பெரும்பலிபீடிகையோங்கிய முன்றிலென்க.

(பி - ம்.) சஎ. 'நெடுநிலைநிறைமண்ணீடுநின்றவாயிலும்', சக. 'கடிவழாங்கா' டு0 - டுக. 'உயிர்க்கடவதொர்தலைதாங்கு'

காடமர் செல்வி கழிபெருங் கோட்டமு
மருந்தவர்க் காயினு மரசர்க் காயினு
௫௫ மொருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினு
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
யிறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமு
௬௦ மருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமு
நிறைக்கற் றெற்றியு மிறைக்களச் சந்தியுங்

௫௩. காடமர்செல்வி - துர்க்காதேவி; சண்டிகையென்றுங்கூறுவர்; (மணி. கஅ: ககரு.) கோட்டம் - கோயில். "கோளி யாலமுங் கோழரை மரங்களுங் குழுமித், நாளி யார்த்தெழு சுடலையு முடலமுந் துவன்றி, மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகை நம், கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே" என் றும் நீலகேசிச் செய்யுளாலும் மயானத்தில் துர்க்கையாலயம் இருந்ததாகத் தெரிகின்றது.

௫௦ - ௫௩. இறந்தோருடைய தலைகள் தூக்குகின்ற மரங்களாற் சுற்றப்பட்டுப் பலிபீடிகை ஓங்கிய முன்றிலையுடைய கோட்டம்.

௫௫. ஒருங்குடன்மாய்ந்த பெண்டிர் - கணவனுடனிறந்தமகளிர்.

௫௪ - ௫. ஆயினும், ஓர் எண்ணிடைச்சொல்; "போதியி லாயினு மிமய மாயினும்,............புகாரேயாயினும்" (சிலப். க: கச - ௬) என்புழிப்போல.

௫௬. நால்வேறுவருணம் - பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர வருணங்கள்.

௫௭. இறந்தோர்மருங்கில் - இறந்தவருடம்பைப் புதைத்தவிடத்தே.

௫௮. குறியவும் நெடியவுமாகிய சிறிய மலைகளைக் கண்டாலொத்த; சிலப். ௨எ : கருக.

௫௯. சுடுமண் - செங்கல். கோட்டம் - அறை; "அமைப் புறங்காட், டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம்" (௬: ககரு - ௬) என்பர் பின்னும்.

௫௮ - ௯. கண்டன்ன கோட்டம்.

௬௦. பெறுதற்கரிய திறலையுடைய தெய்வங்களையுடைய, திருந்திய பலியிடுதற்குரிய தூண்கள்; கந்தம் -ஸ்கந்தமென்னும் வடமொழிச்சிதைவு; "இலகொளிக்கந்தமும்" (மணி. ௨௪ : க௬௨); "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" புறநா. ௫௨.

௬௧. நிறைக்கற்றெற்றி - நிறுத்திய கல்லாலாகிய திண்ணை. மிறைக்களச்சந்தி - வளைந்த இடத்தினையுடைய பலவழிகளுங் கூடினசந்து; மிறை-வளைவு; "மிறைக்கொளி திருத்தி னானே" சீவக. ௨௪௪.

(பி - ம்) ௫௫. 'பெண்டீர்க்' ௫௯. 'சுடுமணோங்கிய' ௬௧. 'நிறைகற் றெற்றியுமிறைகளச்'

தண்டு மண்டையும் பிடித்துக் காவல
ருண்டுகண் படுக்கு முறையுட் குடிகையுந்
தூமக் கொடியுஞ் சுடர்த்தோ ரணங்களு
௬௫ மீமப் பந்தரு மியாங்கணும் பரந்து
சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போ
ரிரவும் பகலு மிளிவுடன் றரியாது
வருவோர் பெயர்வோர் மாறாச் சும்மையு
எ௦ மெஞ்சியோர் மருங்கி னீமஞ் சாற்றி

௬௨. மண்டை - உண்ணுதற்குரிய ஒருவகை மண்கலம்; ஏற்கும்பாத்திரமென்றுங்கூறுவர்; "கவிழ்த்த மண்டை மலர்க்குநர் யாரென", "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்", "ஏலாது கவிழ்ந்தவெ னிரவன் மண்டை" (புறநா. ௧௦௩, ௧௧௫, ௧எ௬.) காவலர் - மயானங்காப்போர்.

௬௩. குடிகை - பர்ணசாலை; 'குடிகா' என்னும் வடமொழிச்சிதைவென்பர்; இஃது இக்காலத்துக் குடிசையெனை வழங்குகின்றது.

௬௪. தூமக்கொடி - புகையொழுங்கு; "மீன்சுடு புகையிற் புலவுநாறு நெடுங்கொடி" புறநா. ௫௨.

௫௩ - ௬௫. கழிபெருங்கோட்டமும், நெடுநிலைக்கோட்டமும், பலிக்கந்தமும், தெற்றியும், சந்தியும், குடிகையும், கொடியும், தோரணங்களும், பந்தரும் யாங்கணும் பரந்தென்க.

௬௬. சுடுவோர்-பிணங்களைச்சுடுவோர்; இடுவோர் - கொணர்ந்து அவற்றைச் சும்மா போகடுவோர். தொடுதல் - தோண்டுதல்; மணி. ௧௬: ௨௫.

௬எ. தாழ்வயின் அடைப்போர்-பள்ளமாகிய இடங்களிற் பிணங்களை அடைத்துவைப்போர்; தாழ்வயின்-தாழ்ந்த இடம்; தாழியிற்கவிப்போர்-பிணங்களைத் தாழியினாலே கவிப்போர்; இதனை, "தேவ ருலக மெய்தின னாதலின், னன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி" (௨௨அ), "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த" (௨௩அ) "ஈமத் தாழி, யகலி தாக வனைமோ" (௨௫௬) "தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" (௩௬௪) எனவரும் புறநானூற்றுப் பாடல்களாலுணர்க; இது, முதுமக்கட்டாழி யெனவும் வழங்கும்.

௬அ. இளிவுடன் - அருவருப்புடன். ௬௯. சும்மை - ஒலி.

எ௦. எஞ்சியோர் - சீவித்திருப்போர். ஈமஞ் சாற்றி - ஈமமுண்டென்பதைச் சொல்லி.

(பி - ம்.) ௬எ. 'காழ்வயினடைப்' ௬அ. 'இரவும்பகலுமேயாவீடினறிவரு' எ௦. 'எஞ்சினர்மருங்கினேமஞ்சாற்றி'

நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையுந்
துறவோ ரிறந்த தொழுவிளிப் பூசலும்
பிறவோ ரிறந்த வழுவிளிப் பூசலு
நீண்முக நரியின் றீவிளிக் கூவுஞ்
௭௫ சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலு
மூண்டலை துற்றிய வாண்டலைக் குரலு
நன்னீர்ப் புணரி நளிகட லோதையி
னின்னா விசையொலி யென்றுநின் றறாது

௭௧. நெய்தலோசையும் - சாப்பறையோசையும்; "ஓரி னெய்தல் கறங்க வோரி, னீர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (புறநா. ௧௯௪); "பல்லவர்க் கிரங்கும் பாடிமிழ் நெய்தல், கல்லென் றொலிக்குங் காடு" பு-வெ. காஞ்சிப்பொதுவியற்பால், ௮.

௭௨. தொழுவிளிப் பூசல் - நன்முழக்கம்; துறவோராதலால், தொழுவிளிப்பூசல் கூறப்பட்டது.

௭௩. பிறவோர் - இல்லறத்தோர்.

௭௫. இறப்போரை அழைக்கும் பேராந்தையின் ஒலியும்; பேராந்தை செத்தோரை அழைக்குமென்றுங் கூறுவர்; "போழ்வாய்க் கூகை, சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிருங், கள்ளியம் பறந்தலை" புறநா. ௨௪௦.

௭௬. குரால் - கோட்டான்.

௭௭. உணவாகத் தலைமூளையைக் கடித்துண்ட ஆண்டலைப்பறவைகளின் குரலும்; ஆண்டலைப் பறவை - ஆண்மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒருவகைப் பறவை; இதனை, "நீண்டபசி யுடற்றிரிந்து வைத்த நெடுங்குஞ் சிச்சிரத்தைத் தனிமெனமென் றெண்ணி, யாண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ வினைத்துமச் சிரமச்ச முழுத்துமாறே" (கலிங்க. கோயில்பாடியது, ௮௫) என்பதனாலுணர்க; "அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்" (பட்டின. ௨௫௮); "ஆண்டலைப் பாடு" (முத்ததிருப். ௩); "ஏமத்து மழு மெரியினு மிருளொடு நிரைக்கா, மக்கட் கையு மோரியு முறழ்ந்துறழ் கதிக்கும், யாமத் தெனடிவந் தாண்டலை மாணா விலைவளைக்குந், தீமைக் கேயிடனுயதோர் செம்மலையுடைத்த" நீல. தரும. .

௭௮. புணரி நளி கடல் - அலைகளையுடைய பெரிய கடல். ஓதையின் - ஓசை போல.

௭௯. இன்னா இசை ஒலி - துன்பத்தை இசைக்கின்ற ஒலிகள்.

௬௯ - ௭௯. மாருச கம்மையும், நெய்தலோசையும், தொழுவிளிப் பூச

(பி-ம்.) ௭௩. 'வழுவிளிப்பூசலும்' ௭௪. 'நீண்முகநரியின்றீவிளிக்குரலும்' ௭௬. 'புலாலூண்பொருந்திய குராலூணகுரலும்' ௭௭. 'ஊன்றலைதுற்றிய' ௭௮. 'நளிர் கடல்'

அ௦ தான்றியு மொடுவையு முழிஞ்சிலு மோங்கிக்
கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து
காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டு
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்
வெண்ணிணத் தடியொடு மாந்தி மகிழ்சிறந்து
அரு புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமுஞ்
சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்
விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்
கிருந்தொடர்ப் படுக்கு மிரத்தி மன்றமும்

லும் அழுவிளிப் பூசலும், கூவும், குரலும், குரலும் குரலும் ஆகிய இன்னு விசைகள் அறு திருக்கப்பெற்று.

அ௦ - அக. தான்றி முதலிய மரவிசேடங்கள் நெருங்கப்பெற்று.

அஉ. காய்பசி - மிக்கபசி; (மணி. சு: ககஎ; டி. கக: நந.) கணம் - கூட்டம்.

அ௩. மால் - மேகம். சினை - கிளை. பலபேய்கள் கூட்டங்கொண்டிருத்தற்கு இடமானதுபற்றி, வாகையடி மன்ற மெனப்பட்டது. பின் வருவனவற்றையும், இப்படியே கொள்க. ஊருக்கு நடுவாய் எல்லாருமிருக்கு மரத்தடியை மன்றமென்பர் (புநந. உஉசு.) ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

அச. தடி - தசை. மாந்தி - உண்டு.

அரு. புள் - பேராந்தை, கோட்டான், கழுகு, பருந்து, காக்கை, ஆண்டலைப்புள் முதலியவைகள். இறைகூரும் - தங்குதல் மிக்க. வெள்ளில் - விளாமரம்.

அசு. சுடலை நோன்பிகள்-காபாலிகர்; "இறைவி கோட்டத்து வீற்றிரு திங்கள தகவை, யுறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான், பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான், சிறைசெய் சிந்தையா னந்தமில் பொருள்களைத் தெரிந்தான்" (தரும. எ) என்னும் நீலகேசிச் செய்யுளால் 'முனிசந்திரன்' என்ற ஒரு முனிவன் மயானத்திலிருந்து தவஞ்செய்தானென்று தெரிகிறது. ஒடியாவுள்ளம் - தளராதவுள்ளம்.

அஎ. மடை - சோறு. வன்னி - வன்னிமரம்.

அஅ. உடைதலைகளைச் சேர்த்து.

அகூ. இருந்தொடர்ப்படுக்கும் - பெரியமாலைகளாகச்செய்யும். இரத்தி மன்றம் - இலந்தைமரநிற்கும் மன்றம்; "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" புறநா. ௩௪.

(பி - ம்.) அ௦. 'ஒடுமையு முழிஞ்சிலு மொடுங்கிக்' அக. 'கள்ளியும் படர்ந்து' அ௩. 'ஆலம் பெருஞ்சினைவாகை மன்றமும்' அச. 'வெண்ணிணக் குடியொடுமொந்தி' அரு. 'வெள்ளிடைமன்றம்' அகூ. 'இருந்தடிபடுக்கும்'

௯௦ பிணந்தின் மாக்க ணிணம்படு குழிசியில்
விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமு
மழற்பெய் குழிசியும் பிழற்பெய் மண்டையும்
வெள்ளிற் பாடையு முள்ளீட் டறுவையும்
பரிந்த மாலையு முடைந்த கும்பமு
௯௫ நெல்லும் பொரியுஞ் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த வோங்கிரும் பறந்தலை
தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வ
ரீற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
முதியோ ரென்னா னிளையோ ரென்னான்
௧௦௦ கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டுங்

---

௯௦. குழிசி - பானை.

௯௧. வெள்ளிடைமன்றம்- வெளியான இடத்தையுடையமன்றம்; "உள்ளூர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்" சிலப். ரு: ௧௧௭.

௯௨. பிழற்பெய்மண்டை.?

௯௩. வெள்ளிற் பாடை, இருபெயரொட்டு. உள்ளீட்டறுவை - உள்ளே பண்டங்கள் இடுதலைப்பெற்ற உறி; "சுவன்மே லறுவையும்" (சிலப். ௧௦: ௯௮.) அறுவை - சீலையெனின், உள்ளீட்டையுடைய கிழியுமாம்.

௯௪. பரிந்த மாலை - பாடையிற்கட்டி அறுத்தெறியப்பட்ட மாலை; "வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த, கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையு மகலும், பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து, கள்ளி யாரிடைக் கரந்ததோர் தோற்றமுங் கடிதே" நீல. தரும. ௪.

௯௫. சில்பலி யரிசி - சிறுபலியாகிய அரிசி; "தூவெள் ளரிசி, சில்பலிச் செய்து" முருகு. ௨௩௩ - ௪.

௯௬. பறந்தலை - பாழிடம்.

அ௩ - ௯௬. வாகைமன்றமும், வெள்ளின்மன்றமும், வன்னிமன்றமும், இரத்திமன்றமும், வெள்ளிடை மன்றமும் ஆகிய இம்மன்றங்கள்யாங்கணும் அழற்பெய்குழிசி முதலியவைகள் பரந்த பறந்தலையென்க.

௬௫ - ௯௬. பரந்து அருது பரந்த பறந்தலையென்க.

௯௮. மு. மணி. ௭ : அ௧. ௧௦௦. கொடுந்தொழிலாளன் - காலன். ௭௯ - ௧௦௧. ஆரிடை பறந்தலை சுடலை தின்னாக்கண்டும்.

(பி - ம்) ௯௦. 'பிணந்தீன்மாககணிணம்படுகுழிசியின்' ௯௨. 'பிறழ்பெய்மண்டையும்' ௯௯. 'இளையோ ரென்னான் முதியோ ரென்னான்'

கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழு
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ
க0ரு வாங்கது தன்னையோ ருங்கடி நகரெனச்
சார்ங்கல னென்போன் றனிவழிச் சென்றோ
னென்புந் தடியு முதிரமு மியாக்கையென்
றன்புறு மாக்கட் கறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழூவூன் பிண்டத்
கக0 தலத்தக மூட்டிய வடிநரி வாய்க்கொண்
டுலப்பி லின்பமோ டுளைக்கு மோதையுங்
கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு
நிலைத்தலை நெடுவிளி யெடுக்கு மோதையுங்
கடகஞ் செறித்த கையைத் தீநா
ககரு யுடையக் கவ்வி யொடுங்கா வோதையுஞ்
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை

க0உ. மிகப்பெரியசெல்வமாகிய கள்ளையுண்டு விளையாடுதலைச்செய்து.

க0ச. மடவோர் - மூடர்.

க0ரு. அது தன்னை - அம்மயானத்தை. கடி - காவல்.

க0சு. தனிவழிச்சென்றோனாகிய சார்ங்கலன்.

க0அ. அன்புறு மாக்கட்கு - உடம்பினிடத்தே அன்புமிகுந்த மனிதர்கட்கு. மாக்களென்றார், ஐம்புலவுணர்ச்சியேயன்றி மனவுணர்ச்சியில்லாதவரென்றற்கு; "மாவு மாக்களு மையறி வினவே" தொல். மரபு. சூ. ௩உ.

க0எ - அ. யாக்கை, என்பு முதலியனவாமென்று மாக்கட்குச் சாற்றி.

க0கூ. வழு - தாதுவிசேடம்; வழுவொடு - வழுவுதலுடனென்றுமாம். பிண்டமென்றது உடம்பை.

க0அ - கூ. சாற்றிக் கிடந்தவென்க; இனி, சாற்றி வாய்க்கொண்டுளைக்கும் நரியோதையெனினுமமையும்.

கக0. அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு.

ககக. உலப்பு இல் இன்பமோடு - கேடில்லாத இன்பத்தோடு.

ககச. தீநாய் - மயானத்திற்றிரியும் ஒருவகைநாய்.

(பி - ம்.) க0ரு. 'தன்னை யொருங்குகடிநகரென' க0எ. 'அன்புந்தடியும்' க0கூ 'வழுவொடு தோன்றியபுழுவூன் பிண்டத்து' ககஉ. 'நிலத்தலை' ககரு. 'கதுவி'

விண்டோர் திசையின் விளித்தனன் பெயர்ந்தீங்
கெம்மனை காணா யீமச் சுடலையின்
கௗo வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத் தேனெனத்
தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்
பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித்
தீத்தொழி லாட்டியென் சிறுவன் றன்னை
யாருமி றமியே னென்பது நோக்கா
கௗரு தாருயி ருண்ட தணங்கோ பேயோ
துறையு மன்றமுந் தொல்வலி மரனு
முறையுளுங் கோட்டமுங் காப்பாய் காவாய்
தகவிலை கொல்லோ சம்பா பதியென

---

கஉஅ. விண்டு - நீங்கி. விளித்தனன் பெயர்ந்து - கூப்பிட்டுக்கொண்டு பெயர்ந்து.

கஉகூ. எம்மனை - என் தாயே.

கௗக. தனது தாயின்முன்னே, இறக்கவும்.

கoசு - ௯க. சார்ங்கலனென்போன் வீழ்ந்து மெய்வைத்தலும்.

கௗஉ. பார்ப்பானென்றது, சார்ங்கலன் தந்தையை; "பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்த" என்று இங்கே சொல்லுதலாலும், "கண்ணில் கணவனை" (சு :கருரு) என்று பின்பு வருதலாலும், சார்ங்கலனுடைய தந்தைதாயரிருவரும் கண்ணையிழந்தோரென்பது பெறப்பட்டது.

கௗச. மணி. சு: கசசு.

கௗரு. அணங்கோ பேயோ ; (மணி. சு : கசஅ, கருo.) அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகளென்பர்; குறள். கூகஅ - பரி.

கௗ௩ - ரு. சிறுவன் றன்னை ஆருயிருண்டது.

கௗசு. துறை - நீர்த்துறைகள். தொல்வலி மரன் - பழைய வலியையுடைய மரம்.

கௗஎ. உறையுள் - தங்குமிடம். காவாய் - காவாமலிருந்தாய்.

கௗசு - எ. புறநா. உஉக - சு.

கௗஅ. தகவிலை கொல்லோ - தகவின்மையையுடையாயோ ; தகவு நின்னிடமில்லையோ என்றுமாம்.

(பி - ம்.) கஉஅ. 'விளிந்தனன்' கஉகூ. 'காணாவீமச்' கௗo. 'பேய்க்கே முன்னுயிர்' கௗக. 'தம்முன் வீழ்ந்துமெய்வைப்பப்' கௗஉ - ௩. 'ஒழிந்த, விதித்தொழி' கௗச. 'யாருமிறமியோமென்னபதுநோக்கா' கௗசு. 'தொல்பதி மரனும்'

மகன்மெய் யாக்கையை மார்புறத் தழீஇ
கசH0 யீமப் புறங்காட் டெயிற்புற வாயிலிற்
கோதமை யென்பாள் கொடுந்துயர் சாற்றக்
கடிவழங்கு வாயிலிற் கடுந்துய ரெய்தி
யிடையிருள் யாமத் தென்னையீங் கழைத்தனை
யென்னுற்றனையோ வெனக்குரை யென்றே
கசடு பொன்னிற் பொலிந்த நிறத்தா னோன்ற
வாருமி லாட்டியென் னறியாப் பாலக
னீமப் புறங்காட் டெய்தினேன் றன்னை
யணங்கோ பேயோ வாருயி ருண்ட
துறங்குவான் போலக் கிடந்தனன் காணென
கடு0 வணங்கும் பேயு மாருயி ருண்ணா
பிணங்குநூன் மார்பன் பேதுகந் தாக
வூழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது
மாபெருந் துன்பநீ யொழிவா யென்றலு
மென்னுயிர் கொண்டிவ னுயிர்தந் தருளிலென்
கடுடு கண்ணில் கணவனை யிவன்காத் தோம்பிடு
மிவனுயிர் தந்தென் னுயிர்வாங் கென்றலு
முதுமூ தாட்டி யிரங்கினண் மொழிவோ

கசக. கோதமை, அவளபெயர். கொடுந்துயர் - தன்மகன் இறந்தா னென்பது.

கசஉ. மணி. சா: சக.

கசங. இருளையுடைய இடையாமத்தில்.

கசடு. பொன்னிற் பொலிந்த நிறத்தாள் - சூரியனைப்போல் விளங்கிய நிறத்தினையுடைய சம்பாபதி; பொன் - சூரியன்; "இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து, விளங்கொளி மேனி விரிசடை யாட்டி" (க - உ.) என்று இந்நூற்பதிகத்தில் வருதல் காண்க.

கசகூ. மணி. சா: கஙச. கசகூ. என - என்று கோதமை சொல்ல.

கடுக. மார்பன் - சார்ங்கலன். பேது கந்தாக-அறியாமை காரணமாக.

கடுங. என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்.

கடுடு. கண்ணில் கணவனை: (மணி. சா: கஙஉ.) ஓம்பிடும் - பாது காப்பான்.

கடுசு. என்றலும் - என்று கோதமை சொல்லலும்.

கடுஎ. முதுமூதாட்டி - சம்பாபதி.

(பி - ம்.) கஙக. 'யாக்கைமார்புற' கசங. 'அழைத்தாய்' கசசு. 'அறியாப்பார்ப்பான்' கசஎ. 'எய்தியோன்' கடுக. 'பேயனுகந்தாக' கடுங. 'துன்பமொழிவாய்' கடுச. 'உயிர்தந்தாலென்'

ளைய முண்டோ வாருயிர் போனாற்
செய்வினை மருங்கிற் சென்றுபிறப் பெய்துத
கசுo லாங்கது கொணர்ந்துநின் னாரிடர் நீக்குத
லீங்கெனக் காவகொன் றன்றுநீ யிரங்கல்
கொலையற மாமெனுங் கொடுந்தொழின் மாக்க
ளவலப் படிற்றுரை யாங்கது மடவா
யுலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோ
கசுரு ரிலரோ விந்த விடைப் புறங்காட்
டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்ட
நிரயக் கொடுமொழி நீமொழி யென்றலுந்
தேவர் தருவர் வரமென் றொருமுறை
நான்மறை யந்தணர் நன்னூ லுரைக்கு
களo மாபெருந் தெய்வ நீயரு ளாவிடின்
யானோ காவே னென்னுயி ரீங்கென
வூழி முதல்வ னுயிர்தரி னல்லல

கருஅ - க௯. பிறப்பெய்துதலின் றுமுறன்றோ; "செய்வினை வழித்தா யுயிர்செலு மென்பது, பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்" சிலப். உ௯: க௬௰ - [illegible].

கசுo. அது - அவ்வுயிரை. ஆரிடர் - தீர்த்தற்கரிய துன்பம்.

கசுக. எனக்கு ஆவதொன்றன்று - எனக்கு இயலுவதான ஒரு காரிய மன்று.

கசுா. அவலப்படிற்றுரை - கேடுபடத் தருகின்ற பொய்யுரை. அது அவலப்படிற்றுரையென்க.

கசுரு. இலரோ - [illegible]. புறங்காட்டின்.

கசுசு. ஆயிரங் கோட்டம் அமைந்தன: ஆயிரம் - அநேகம்; "இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த, குறியவும் நெடியவுங் குன்றுகண் டன்ன, சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்" ([illegible]: [illegible] - [illegible]) என்றார் முன்னும்.

கசுஎ. நிரயக் கொடுமொழி - நரகத்தைத் தரும் கொடிய வார்த்தை; என்றது, "இவனுயிர் தாவென் றுயிர்களிக்கு" (மணி. [illegible]: க[illegible]) என்றதை; என்றலும் - என்று [illegible] சம்பாபதி [illegible].

கசுஅ. நால் - வேதம். க௭௦. தெய்வமாகிய நீ.

கஎக. யான் என்னுயிரைத் துறப்பேனென்று கோதமை சொல்ல.

கஎஉ. ஊழிமுதல்வன் - பிரமன்; "தெய்வக் கருவுந் திசைமுகக்

(பி - ம்.) க௬௰. 'அவலப்படிற்றுரை', 'அவலைப்படிற்றுரை' கசுரு. 'புறங்காட்டின்' க௬எ. '[illegible]த்தொடு' க௬௯. 'செந்நாவுரைக்கு' கஎக. 'என்னுயிரென்றபின்'

தாழித் தாழி யகவரைத் திரிவோர்
தாந்தரின் யானுந் தருகுவன் மடவா
கஎரு நீங்கெ னாற்றலுங் காண்பா யென்றே
நால்வகை மரபி னரூபப் பிரமரு
நானல் வகையி னுருபப் பிரமரு
மிருவகைச் சுடரு மிருமூ வகையிற்
பெருவனப் பெய்திய தெய்வத கணங்களும்

கருவுஞ்,செம்மலர் முதியோன் செய்த வந்நாள்'' (மணி. பதிகம்: உஅ-கூ.) இகரத்தை அசைநிலையாக்கி ஊழ்வினையாகிய முதல்வனெனக்கூறினும் பொருந்தும்.

கஎங. சக்கரவாளமாகிய தாழியினுடைய உள்ளிடத்தே சஞ்சரிப்பவர்.

கஎச. தரினெனவே தரலின்மை பெறப்பட்டது.

கஎங - ச. இறந்துபோன உயிரை மீட்டுக்கொடுக்குமாற்றல் இந்தச் சக்கரவாளத்திலுள்ள தேவர்களுக்கு எங்ஙனமில்லையோ அங்ஙனமே எனக்குமில்லை யென்றபடி.

கஎரு. ஆற்றல் - வலி. என்று - என்று சம்பாபதிசொல்லி.

கஎசு. நால்வகை மரபின் அருபப் பிரமரும் - உலகம் முப்பத்தொன்றனுள் இருபத்தெட்டாவதாகிய 'ஆகாசாநந்தியாயதனலோகம்' முதலிய நான்கு உலகங்களிலுமுள்ள அருபப்பிரம்மசாதியாராகியநால்வகையினரும். இவர்களைத் தியானம் ஐந்தனுள் அவிசேஷமென்னும் ஐந்தாவதில் தேறியவர்களென்பர்.

கஎஎ. நால் நால்வகையின் உருபப் பிரமரும் - மேற்கூறிய உலகங்களுள் பன்னிரண்டாவதாகிய 'பிரஹ்மகாயிகலோகம்' முதலாகிய உலகம் பதினாறிலுமிருக்கிற உருபப்பிரஹ்ம சாதியாராகிய பதினறுவகையினரும்; இவர்களில் கஉ, கங, கச-ஆம் உலகங்களிலுள்ளவர்களை 'ஸ்ரோதாபத்தி' என்னும் முதலாவது தியானத்தில் தேறியவர்களென்றும், கரு, கசு, கஎ-ஆம் உலகங்களிலுள்ளவர்களை 'ஸகிருதாகாமி' என்னும் இரண்டாவது தியானத்தில் தேறியவர்களென்றும், கஅ, கக, உ0-ஆம் உலகங்களிலுள்ளவர்களை 'அநாகாமி'என்னும் மூன்றாவது தியானத்தில் தேறியவர்களென்றும், உக-ஆவது முதலிய ஏழுலகங்களிலுள்ளவர்களை 'அர்ஹத்' என்னும் நான்காவது தியானத்தில் தேறியவர்களென்றும் பௌத்தநூல்கூறும்.

கஎசு - எ. இருவகைப் பிரம்மலோகங்கள் இருபதின் பெயர்களையும் இந்நூற்பதிகத்தின் உஅ-கூ ஆம் அடிகளின் உரையிற்காண்க.

கஎஅ. இருவகைச்சுடர்-சந்திர சூரியர்கள்.

கஎஅ - கூ. மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் ஆறுவதாகிய 'மஹாராஜிகலோகம்' முதலிய உலகம் ஆறிலுமுள்ள அறுவகைத்

(பி - ம்.) கஎங. 'அகவயிற்றிரிவோர்' கஎச. 'மடவோயீங்கெனூற்றலுங்' கஎசு. 'பிடமரும்' கஎஎ. 'உருபிதப்பிரமரு', 'உருபப்பிடமரு'

கஅ0 பல்வகை யசுரரும் படுதுய ருறூஉ
மெண்வகை நரகரு மிருவிசும் பியங்கும்
பன்மீ னீட்டமு நாளுங் கோளுந்
தன்னகத் தடக்கிய சக்கர வாளத்து
வரந்தரற் குரியோர் தமைமுன் னிறுத்தி
கஅரு யாந்தை கெடுமிவ ளருந்துய ரிதுவெனச்
சம்பா பதிதா னுரைத்தவம் முறையே
யெங்குவாழ் தேவரு முரைப்பக் கேட்டே
கோதமை யுற்ற கொடுந்துயர் நீங்கி
யீமச் சுடலையின் மகனையிட் டிறந்தபின்
கசூ0 சம்பா பதித னுற்ற ரேன்ற
வெங்குவாழ் தேவருங் கூடிய விடந்தனிற்

---

தெய்வகணங்கள். இந்தவுலகங்களின் பெயரைப் பதிகத்து உஅ-கூ ஆம் அடியின் உரையிற்காண்க. 'பெருவனப் பெய்திய' என்றார் விளங்கொளி மேனியராதலின்.

கஅ0. படுதுயர் - மிக்க துன்பம்.

கஅக. எண்வகை நரகர் - மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் முதலாவதாகிய நரகலோகத்தின் பகுதிகளான மகாசிரயம், ரௌரவம், காலஸூத்ரம், ஸங்கீவனம், மஹாவீசி, தபனம், ஸம்பிரதாபனம், ஸம்ஹாதம் என்னும் எட்டு நரகங்களிலுமுள்ளவர்கள்.

கஅ௨. ஈட்டம்- கூட்டம். நாள்-இருபத்தேழு நட்சத்திரங்கள்.

கஅ௩. மேற்கூறிய அரூபப்பிரமகணலோகமுதலியவற்றைத் தன்னுள் அடக்கிய கோளத்தைச் சக்கரவாளமென்பர்; "சக்கர வாளத்துத் தேவரெல்லாம்" (மணி. க௨: எ௨), "எண்ணருஞ் சக்கர வாள மெங்கணும்" (ஷை. உகூ: ரு௨) என வருதல் காண்க.

கஅ௪. வரந்தரற்குரியோர்-தேவர். முன்னிறுத்தி-கோதமைக்கு முன்னே நிறுத்தி.

கஅரு. அரந்தை-துன்பம். கெடும்-கெடுமின். என-என்று சம்பாபதி சொல்ல.

கஅ௬ - எ. சம்பாபதி உரைத்தமுறையினை மணி. ௬: களரு - ச ஆம் அடிகளிற்காண்க.

கஅஅ. இறக்கத் துணிந்தமையால் கோதமை கொடுந்துயர் நீங்கினாள். இது போன்ற நிகழ்ச்சியைச் சிலப்பதிகாரம், உரு: அ௨ - ஆம் அடி முதலியவற்றிற் காண்க.

கஅகூ. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

கசூ0. - கசூக. தோன்றக் கூடியவிடமென்க.

(பி - ம்.) கஅ௨. 'பண்மீனீட்டமு' கஅச-ரு 'உரந்தரற் குரியோர் தம்மைமுன் னிறுத்தின், காக்கை' கசூக. 'அங்குவாழ் தேவருங் கூட்டிய'

சூழ்கடல் வளைஇய வாழியங் குன்றத்து
நடுவு நின்ற மேருக் குன்றமும்
புடையி னின்ற வெழுவகைக் குன்றமு
கசுரு நால்வகை மரபின் மாபெருந் தீவு
மோரீ ராயிரஞ் சிற்றிடைத் தீவும்
பிறவு மாங்கத னிடவகை யுரியன
பெறுமுறை மரபி னறிவுவரக் காட்டி
யாங்குவா ழுயிர்களு மவ்வுயி ரிடங்களும்
உ00 பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து

கசுஉ. சூழ்கடல - பெரும்புறககடல். ஆழியங்குன்றத்து - சக்கரவாளகிரியின் உட்பட்ட இடத்தில்.

கசுங. நடுவிடத்தே நின்றதாகிய, எண்பத்திராயிரம் யோசனை உயரமும் அவ்வுயரத்திற்குத் தக்க பருமையும் அமைந்துள்ள மேருமலையும்.

கசுச. அம்மேருவின் பக்கத்தே அதிலிருந்து உயரத்தில் ஒன்றற்கொன்று வரவரப் பாதி பாதியளவு குறைந்து குறைந்து ஒன்றைச்சுற்றியொன்றாகச் சூழ்ந்துள்ள ஏழு குலகிரிகளும்.

கசுரு. மேற்கூறிய மேருவும் அதனைச் சூழ்ந்துள்ள ஏழுகுலகிரிகளும் அக்குலகிரிகளுள் ஒவ்வொன்றனையும் சூழ்ந்து அவ்வக்கிரியின் உயர அளவுள்ள ஆழமும் அகலமுமமைந்த ஏழு கடல்களும் ஆகிய இவற்றையெல்லாம் சூழ்ந்து கிடக்கும் பெரும்புறக்கடலிலுள்ள சம்புத்தீவு முதலிய நான்கு மகாத்வீபங்களும். இந்த நான்கினுள் தெற்கேயுள்ளது சம்புத்தீவு; இது 'நாவலந்தீவு' என்றுங் கூறப்படும்; இதனை "நாவலோங்கிய மாபெருந் தீவு" (மணி. உ: க), "நாவலொடு பெயரிய மாபெருந்தீவத்து" (ஷை. கக: க0எ) என்பவற்றாலுணர்க.

கசுசு. மஹாத்வீபம் நான்கினுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே ஐந்நூறு ஐந்நூறாகச் சூழ்ந்துள்ள இரண்டாயிரம் சிறு தீவுகளும்; இச்சிறு தீவுகள் அந்தரத்தீவுகளென்றுஞ் சொல்லப்படும்.

கசுரு - சு. "அந்தரத் தீவினு மகன் பெருந் தீவினும்" (உரு: உஉச.) என்று பின்வருதல் காண்க.

கசுங - சு. இவ்வடிகளிலுள்ள வரலாறுகள் பர்மாதேசத்துப் புத்த நூலிலிருந்து தெரிந்துகொள்ளப்பட்டன.

கசுஎ - அ. உரியனவற்றைக்காட்டி.

கசுகூ. உயிர்களென்றது, அவ்வவ்வுயிர்கள் வாழுகின்ற உடம்புகளை.

உ00. பாங்கு - பகுதித்திரள்; "அடியோர் பாங்கு மாயமு நீங்கி" (சிலப். கசு: அரு); அழகுமாம். மண்ணீட்டின் - சுதையாற் செய்யப்பட்டுள்ள பாவைவடிவமாக.

(பி - ம்.) கசுஉ 'ஆழிக்குன்றத்து' உ00. 'மண்ணிடிற்'

மிக்க மயனா லிழைக்கப் பட்ட
சக்கர வாளக் கோட்டமீங் கிதுகா
ணிடுபிணக் கோட்டத் தெயிற்புற மாதலிற்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையா
உ0ரு ரிதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைக்க
மதனி னெஞ்சமொடு வான்றுய ரெய்திப்
பிறந்தோர் வாழ்க்கை சிறந்தோ னுரைப்ப
விறந்திருள் கூர்ந்த விடையிருள் யாமத்துத்
தூங்குதுயி லெய்திய சுதமதி யொழியப்
உக0 பூங்கொடி தன்னைப் பொருந்தித் தழீஇ
யந்தர மாறா வாறைந் தியோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணிபல் லவத்திடை மணிமே கலாதெய்வ
மணியிழை தன்னைவைத் தகன்றது தானென்

சு.—சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை முற்றிற்று.

---

உ0க. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங் கூறுவர்.

உ0ங. இடுதல் - போகடுதல். பிணக்கோட்டம் - மயானம்.

உ0ச. மு. மணி. சு: ஙூ0.

உ0ரு. இருந்தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

உ0சு. மதனில் நெஞ்சமொடு - செருக்கற்ற மனத்துடனே.

உ0எ. சிறந்தோன்-மணிமேகலை; வாழ்க்கையென்றது நிலையாமையை. வாழ்க்கையைச் சிறந்தோன் உரைப்ப.

உ0அ. இடையிருள் யாமத்து - நடுயாமத்தில்; மணி. சு: கசங.

உக0. பூங்கொடிதன்னை - மணிமேகலையை.

உகக. அந்தரம் ஆறா - ஆகாயமே வழியாக.

உகக - உ. முப்பதுயோசனை தூரம் தென்றிசைக்கண்ணே சென்று.

உக0 - கச. மணி. கூ: ருரு - எ.

க - உகச. கதிர்மண்டிலம் சொரிய, மேனியள் ஏத்தி நோக்கி என்னுற் றீரென, அவள் உரைத்தலும், அருந்தெய்வமுரைப்ப, சுதமதி என்னையோ வென, நேரிழை கூறும்; அங்ஙனங்கூறுகின்ற தெய்வம், இதன் வரவு இது வென்றுரைக்க, சிறந்தோனுரைப்ப, தெய்வம் இடையிருள்யாமத்துச் சுத மதியொழியப் பூங்கொடிதன்னைத் தழீஇச் சென்று மணிபல்லவத்தில் வைத்து அகன்றதெனமுடிக்க.

(பி - ம்.) உ0ச. 'என்பவரறியார்' உ0ரு. 'இதுவெனவிருந்' உக0. 'பொருந்திவடழீஇ'

# ஏழாவது

# துயிலெழுப்பியகாதை.

[ஏழாவது மணிமேகலாதெய்வம் உவவனம்புகுந்து சுதமதியைத் துயிலெழுப்பியபாட்டு.]

மணிமே கலைதனை மணிபல் லவத்திடை
மணிமே கலாதெய்வம் வைத்து நீங்கி
மணிமே கலைதனை மலர்ப்பொழிற் கண்ட
வுதய குமர னுறுதுய ரெய்திக்
௫ கங்குல் கழியிலென் கையகத் தாளெனப்
பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன்
முன்னர்த் தோன்றி மன்னவன் மகனே
கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியுங்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
௧௦ மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகுந்
தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த

௩. மலர்ப்பொழிற் கண்ட - உவவனத்திற்கண்ட.

௪. உறுதுயர் - மிக்க துன்பம்.

௫. கையகத்தாள் - கையினிடத்தே யுள்ளாள்.

௬. பொருந்தாது - துயிலாது. ௯. வறம் - வறுமை.

அ - ௧௨. இந்நூற் பதிகம் உ௪ -ஆம் அடியைப் பார்க்க; "கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி, நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யாணை யில் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" சீவக. உ௫௫.

௧௩. தவத்திறம் - தவத்தின்கூறுபாடு.

(பி - ம்) ௪. 'துயிலெய்தி' அ. 'திரிந்திடக் கோணிலை' ௧௨. 'தகுவை யாயின்', 'தகுதியையாயிற்' ௧௩. 'தவத்திற்பூண்டோ'

வவத்திற மொழிகென் றவன்வயி னுரைத்தபி
கரு னுவவனம் புகுந்தாங் குறுதுயில் கொள்ளுஞ்
சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி
யிந்திர கோடணை யிந்நகர்க் காண
வந்தே னஞ்சன் மணிமே கலையா
னாதிசான் முனிவ னறவழிப் படூஉ
உ0 மேது முதிர்ந்த திளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னையோர்
வஞ்சமின் மணிபல் லவத்திடை வைத்தேன்
பண்டைப் பிறப்பும் பண்புற வுணர்ந்தீங்
கின்றேழ் நாளி லிந்நகர் மருங்கே
உரு வந்து தோன்று மடக்கொடி நல்லாள்
களிப்புமாண் செல்வக் காவற் பேரூ
ரொளித்துரு வெய்தினு முன்றிற மொளியா
ளாங்கவ ளிந்நகர் புகுந்த வந்நா

கச. அவத்திறம் - கேடுசெய்யுங்காரியம் ; "தவஞ்செய்வார்...
செய்வாராசையுட் பட்டு" (குறள், உசசு) என்பதில் 'அவம்' என்பது
இப்பொருளில் வருதல்காண்க.

சு - கச. மணி. கஅ: அ0 - அரு.

க - கச. மணிமேகலாதெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்திடை
வைத்து நீங்கிப் பொருந்தாதிருந்தோனுகிய உதயகுமரன்முன்னர்த் தோன்றி
...ம் ஒழிகவென்று உரைத்தபினென்க.

கஎ. இந்திரகோடணை - இந்திரவிழா.

கஅ. மு: சிலப். கரு: நுரு; அஞ்சல் - அஞ்சாதே.

ககூ. ஆதிசால்முனிவன் - புத்தன்.

உ0. ஏது முதிர்ந்தது - ஏதுநிகழ்ச்சி முற்றியது.

உக. விஞ்சையின் - வித்தையினலே.

உச. இன்றேழ்நாளில்-இற்றைக்கேழாவதுநாளில்; மணி. கக: கஉகூ.

உரு. தோன்றும் - தோன்றுவாள். நல்லாள் - மணிமேகலை.

உசு. பேரூர் - காவிரிப்பூம்பட்டினத்தில்.

உஎ. உருவை மறைத்து வருவாளாயினும்.

(பி - ம்.) கச. 'அவ்வயினுரைத்தபின்' கரு. 'நவவனம்' உக. 'குணர்ந்துநின்' உரு. 'வந்துகாண்குறும்' உசு. 'பெயரூர்' உஎ. 'உன்றிறமொழியாள்', 'ஊன்றிறமொழியாள்'

ளீங்கு நிகழ்வன வேதுப் பலவுள
ந௦ மாதவி தனக்கியான் வந்த வண்ணமு
மேதமி னெறிமக ளெய்திய வண்ணமு
முரையாய் நீயவ ளென்றிற முணருந்
திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக்
கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென்
ந௫ றுமஞ் செய்த நன்று ணள்ளிருட்
காமன் கையறக் கடுநவை யறுக்கு
மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே
நனவே போலக் கனவகத் துரைத்தே
ளீங்கிவ் வண்ண மாங்கவட் குரையென்
ச௦ றந்தரத் தெழுந்தாங் கருந்தெய்வம் போயபின்
வெந்துய ரெய்திச் சுதமதி யெழுந்தாங்
ககன்மனை யரங்கத் தாசிரியர் தம்மொடு

உ௯. நிகழ்வனவாகிய ஏதுக்கள்.

ந௧. ஏதமில்நெறி - குற்றமில்லாதவழி; அஃதாவது விசுத்திமார்க்கம்.

ந௨. அவள்-மாதவி; என்திறம் உணரும்-என்வரலாற்றை உணர்வாள்.

ந௩. பௌவத்து - கடலினிடத்து. தெய்வமொன்று உண்டென - னது குலமுதல்வனை விபத்தினின்று நீக்கிப் பாதுகாத்த தெய்வமொன்று உள்ளதென்று.

ந௫. நன்னளிற் செறிந்த இருளிடத்தே.

ந௩ - ௫. சிலப் ௧௫ : உ௮ - ஆம் அடி முதலியவற்றின் பொருளை இவற்றுடன் ஒப்பிடுக.

ந௬ - எ. சிலப் ந௦ : உ௫ - ௬.

௧௫ - ச௦. மணிமேகலாதெய்வம் புகுந்து நீக்கி, 'இந்நகரில் இந்திர விழாக்காண வந்தேன்; யான் மணிமேகலாதெய்வம் ; இளங்கொடிக்கு ஏது முதிர்ந்ததாதலால் அவளை மணிபல்லவத்தில் வைத்தேன்; அவள் இந்நகரில் இற்றைக்கு ஏழாநாளில் தோன்றுவள்; ஏதுப் பலவுள ; மாதவிக்குரை ; அவள் என்திறமுணரும் ; இவ்வண்ணம் அவட்கு உரை' என்று போயபி ன்னெனக.

ச௨. அகல் மனை அரங்கத்து - விசாலித்த வீடாகிய நடனசாலையில்; ஆசிரியர் தம்மொடு - இயலாசிரியனும், ஆடலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமையோனுமாகிய இவர்களோடு ன்று.

(பி - ம்) ந௧. 'ஏதமினின்மக', 'ஏதமுனிமைக' ந௨ 'உரைப்பொருளு ணரும்' ந௩. 'பவ்வத் தெய்வ முண்டென' ந௫. 'நல்லிருள்' ந௬. 'கை யாற் கடுநவை' ச௧. 'எய்தியசுதமதி' ச௨. 'தாசியர்தம்மொடு'

வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி
யாடல் புணர்க்கு மரங்கியன் மகளிரிற்
சரு கூடிய குயிலுவக் கருவிகண் டுயின்று
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்த் தீந்தொடை
கொளைவல் லாயமோ டிசைகூட் டுண்டு
வளைசேர் செங்கை மெல்விர லுதைத்த
வெம்மைவெய் துறுது தன்மையிற் றிரியவும்
ருo பண்பில் காதலன் பரத்தமை நோனா
துண்கண் சிவந்தாங் கொல்குகொடி போன்று
தெருட்டவுந் தெருளா தூடலொடு துயில்வோர்
விரைப்பூம் பள்ளி வீழ்துணை தழுவவும்

சங. வகைதெரிமாக்கட்கு - அவிநய முதலிய கூறுபாடுகளைத் தெரி கின்ற மாந்தர்களுக்கு. வட்டணை காட்டி - கமல வர்த்தனையைக்காட்டி; கமலவர்த்தனையாவது கைத்தலங்காட்டல்; சீவக. சுஎரு.

சச. அரங்கியல் மகளிரின் - நாடகமகளிர்போல; நாடக மகளிருட னென்றுமாம்.

சரு. கூடியகுயிலுவக்கருவி-சேர்ந்த குழல் யாழ் மத்தளம் குடமுழா இடக்கையென்பவைகள்; "கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங், குழல் வழி நின்றது யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே முழவொடு, கூடிநின் றிசைத்த தாமந் திரிகை" (சிலப். ங: கஙஅ - சஉ. உரை.) கண்டுயின்று - ஒலியாதடங்கி. 'மகளி ரின்' (சச) என்றதனால் அவர்கள் துயின்றமையும் பெறப்பட்டது.

சசு - கூ. பண்ணுக்கிளை - பண்ணின் வகைகளை. பயிரும் - இசைக்கும். தீந்தொடை - இனிய நரம்புகள். கொளைவல் ஆயமோடு - பாட்டில் வல்ல மகளிர்கூட்டத்துடனே; கொளை - ஒற்றறுத்தலுமாம். கூட்டுண்டு - சேர்ந் தனுபவித்து. உதைத்த - தெறித்த. உறுது - உறுமையால். தொடை திரி யவுமென்க.

ருo - ருங. பரத்தமை - பரத்தன் தன்மை; பரத்தையை நுகர்வான் பரத்தன்; "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண் ணேன் பரத்தநின் மார்பு" (குறள், கஙகக); "வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு" (சிலப். கசு: சுங.) நோனாது - பொறாமல். துயில்வோர் - ஊடியமகளிர். வீழ்துணை - விரும்பியகணவன். துயில்வோர் தழுவவும்.

(பி - ம்.) சசு. 'பண்ணுக்கிழமைபிறமண்ணியாழ்' சஎ. 'கொளவல் லாய' சஅ. 'வளையார் செங்கை' சகூ. 'வேதுறுது' ருo. 'காதல்பார்த் தமை நோனாது' ருக. 'நுண்கண்' ருஉ. 'துயில்வோள்'

தளர்நடை யாயமொடு தங்கா தோடி
ருரு விளையாடு சிறுதே ரீர்த்துமெய் வருந்தி
யமளித் துஞ்சு மைம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்
காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து
தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவு
சுo மிறையுறை புறவு நிறைநீர்ப் புள்ளுங்
காவுறை பறவையு நாவுள் ளழுந்தி
விழவுக்களி யடங்கி முழவுக்கண் டுயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொ ணடுநாட்
கோமகன் கோயிற் குறுநீர்க் கன்னலின்
சுரு யாமங் கொள்பவ ரேத்தொலி யரவமு
முறையுணின் றோங்கிய வுண்ணு வுயக்கத்து
நிறையழி யானை நெடுங்கூ விளியுந்
தேர்வழங்கு தெருவுஞ் சிற்றிடை முடுக்கரு
மூர்காப் பாள ரெறிதுடி யோதையு
எo முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்

---

ருச. தளர்நடையாயம் - சிறார்கூட்டம்.

ருசு. ஐம்படைத்தாலி : மணி. ௩: கங௮ - உரையைப்பார்க்க.

ரு௮ - கூ. காவற் பெண்டிர் - செவிலித்தாயர். கடிப்பகை: (மணி. : எ௩.) காவற்பெண்டிர் துயில்வதியவும்.

சுo. இறை - இறப்பு. சுக. கா - சோலை.

சுஉ. களி - களிப்பு; கூத்துமாம். சுஙு. நடுநாள் - நடு இரவில்.

சக - சுங. தன்மையிற்பிரியவும், வீழ்துணை தழுவவும், துயில்வதியவும், ருவி கண்டுயின்று நா உள்ளழுந்தி முழவுக் கண்டுயின்று ஊர் பாயல்கொள் டுநாளிலென்க.

சுச. கன்னலின் - நாழிகைவட்டிலால்; முல்லை. ரு௮.

சுரு. யாமங்கொள்பவர் - நாழிகைக்கணக்கர்; சிலப். ரு: சக.

சுசு. உண்ணு உயக்கம் - உண்ணமையாலுண்டாகிய வருத்தம்.

சுஎ. நெடுங்கூவிளி - நெடியகூப்பிடுதலின் முழக்கம்; மணி.எ: கரு.

சு௮. சிற்றிடைமுடுக்கர் - சிறிய இடங்களையுடைய முடுக்குத் தெருக்கள்.

சுகூ. துடி - ஒருவகைத் தோற்கருவி.

எo. கலம்புணர் கம்மியர் - கப்பலிற் சேர்ந்து தொழில் செய்வோர்.

(பி - ம்.) ருச. 'தாங்காதோடி' சுஉ. 'களிப்படங்கி' சுச-ரு. 'குறுநீர்க் கன்னல், யாமங்கொள்வோர்' சுசு. 'ஓங்கிய'

துழந்தடு கள்ளின் றோப்பியுண் டயர்ந்து
பழஞ்செருக் குற்ற வனந்தர்ப் பாணியு
மரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை
விரவிய மகளி ரேந்திய தூமத்துப்
எரு புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கந்
தீர்வினை மகளிர் குளனா டரவமும்
வலித்த நெஞ்சி னாடவ ரின்றியும்

---

எக. துழந்து அடுகள்ளின்தோப்பி உண்டு அயர்ந்து-துழாவிச்சமைத்த கள்ளுகளில் நெல்லாற் சமைத்த கள்ளையுண்டு தம்மைமறந்து; "இல்லடு கள்ளின் றோப்பி பருகி" பெரும்பாண். கசஉ.

எஉ. அனந்தர் - கள்ளையுண்டமையாலுண்டாகிய செருக்கு; "அனந்தர் நடுக்க மல்ல தியாவதும்" பொருந. கூச.

எங. கடிப்பகை - பேய்க்குப் பகையாகவுள்ளதென்று பொருள்; அரவாய்க்கடிப்பகை - அரம்போன்ற வாயினையுடைய வேப்பிலை; ஐயவிக்கடிப்பகை-வெண் சிறுகடுகு; இவை பேய்க்குப்பகை யென்பதை புறநா. உஅக - ஆம் செய்யுளாலும் உணர்க. பேய்முதலியவைகள் அணுகாதிருத்தற்கு இருவகைக் கடிப்பகையும் கூறப்பட்டன; மணி. ங: கஙச - உரையைப் பார்க்க.

எச. தூமத்து - புகையுடன்.

எங - ச. மகளிரேந்திய அரவாய்க்கடிப்பகை ஐயவிக்கடிப்பகைவிரவிய தூமம் ஆகிய இந்த இரண்டுடன் சென்று என ஒருசொல் வருவிக்க.

எரு - சு. புனிறுதீர்மகளிர்; கயக்கந்தீர்மகளிரெனக. கயக்கம் - கயங்குதல். புதல்வரைப்பெற்றுப் புனிறுதீர்ந்த மகளிர் இரவிற்சென்று குளத்தில் நீராடுதலை, "கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து, பணைத்தேந் திளமுலை யமுத மூறப், புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு, வளமனை மகளிர் குளநீ ரயர" (மதுரை. கூ00 - கூ0ங) என்பதனாலுமுணர்க. புதல்வரைப்பெற்றமகளிர் எழுந்துசென்று பத்தாவது இரவில் நீராடவேண்டுமென்று ஆபஸ்தம்பகிருஹ்யத்தின் கரு-ஆம் கண்டத்துள்ள அ-ஆம் ஸூத்திரத்தாலும், அந்நூலை அநுஸரித்துத் தோழப்பரென்று வழங்குகிற வைதிகஸார்வபௌமரியற்றிய கிருஹ்யார்த்தத்தில் கூ-ஆம் கண்டத்தில் நாமகரணப்பிரகரணத்திலுள்ள "தசமேஹநி" என்னும் ஸூத்திரத்தாலும் தெரிகின்றது.

எஎ. வலித்த நெஞ்சின் ஆடவர் இன்றியும் - பகைமையைக் கருதிய நெஞ்சினையுடைய வீரர் இல்லாதிருக்கவும்.

(பி - ம்.) எக. 'துழந்தகள்ளின் தொப்பிரண்டயந்து' எங. 'நாவாய்க் கடிப்பகை' எச. 'இரவியன்மகளிர்' எரு-சு. 'புதல்வர்ப்பயந்தபுனிறுதீருகத்து, விரிவியன்மகளிர்குளநாளரவமும்', 'புனிறுதீருயக்கந், தீர்வியன்'

புலிக்கணத் தன்னோர் பூத சதுக்கத்துக்
கொடித்தேர் வேந்தன் கொற்றங் கொள்கென
அ0 விடிக்குரன் முழக்கத் திடும்பலி யோதையு
மீற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
கடுஞ்சூன் மகளிர் நெடும்பு ணுற்றோர்
தந்துயர் கெடுக்கு மந்திர மாக்கண்
மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்கென
அரு நின்றெறி பலியி னெடுங்குர லோதையும்
பல்வே றோதையும் பரந்தொருங் கிசைப்பக்
கேட்டுளங் கலங்கி யூட்டிரு ளாழுவத்து
முருந்தே ரிளநகை நீங்கிப் பூம்பொழிற்
றிருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
கூ0 மிக்கமா தெய்வம் வியந்தெடுத் துரைத்த
சக்கர வாளக் கோட்டத் தாங்கட்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவியி னொருபுடை யிருந்தலுங்

எஅ. புலிக்கணத் தன்னோர் - வீரர். பூத சதுக்கத்து - பூதத்தை யுடைய சதுக்கத்திலே ; சதுக்கம் - நாற்சந்தி.

அக. பு. மணி. சு: கூஅ.

அ௨. கடுஞ்சூல்மகளிர்-முதற்சூலையுடைய மகளிர்; "கடுஞ்சூன் முண் டகங் கதிர்மணி கழாஅலவும்" சிறுபாண். கசஅ.

அஎ. ஊட்டிருளழுவத்து - ஊட்டினாற்போன்ற இருட்பரப்பில்.

அகூ. பு. மணி. சு: ௨௨.

கூ௨ - ௩. பு. மணி. கஎ: எஎ - அ. உலக அறவி - ஊரம்பலம்; எல் லாச்சாதியாரும் வந்து தங்குதற்குரிய தருமசாலை ; இதனை 'உலோகோபகா ரிகா' என்பர் வடநூலார்.

சக - கூ௩. சுதமதியெழுந்து நடுநாளில் ஏத்தொலியரவமும், நெடுங் கூவிளியும், துடியோதையும், அனந்தர்ப்பாணியும், குளனுடரவமும், பலி யோதையும், நெடுங்குரலோதையும் ஆகிய பல ஓசைகளையும் கேட்டு உளங் கலங்கி நீங்கிப் போகிச் சக்கரவாளக்கோட்டத்திடத்தே உலகவறவியின் ஒரு புடையிருத்தலுமென்க.

(பி - ம்.) எஅ. 'பூதச்சதுக்கத்து' அரு. 'புலியின்' அஎ. 'பூட்டிரு ளாழுவத்து' அஅ. 'நீங்கியபூம்பொழில்' கூ௩. 'உலகவிறைவி யொருபுடை'

கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
கூரு வந்தி லெழுதிய வற்புதப் பாவை
மைத்தடங் கண்ணாண் மயங்கினள் வெருவத்
திப்பிய முரைக்குந் தெய்வக் கிளவியி

கூச - ரு. நெடுநிலை உடைக்கந்து அந்தில் - நெடிய தோற்றத்தையுடைய தூணாகிய அவ்விடத்தே; காரணம் காட்டிய - பழவினையாகிய காரணத்தை யாவருக்கும் காட்டுதற்பொருட்டு; எழுதிய - மயனென்னும் தெய்வத்தச்சனால் நிருமிக்கப்பட்ட; அற்புதப் பாவை-யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்ற பாவை ; இது, மேற்கூறிய உலகவறவியிற் சம்பாபதி கோயிலின் கிழக்கேயுள்ள தூணொன்றில் தெய்வகணத்தோனாகிய துவதிகனென்பவனுடைய வடிவம்போல மயனால் நிருமிக்கப்பட்ட பாவை ; முக்காலச்செய்தியையும், கேட்போர்க்குச் சொல்லும் இயல்பையுடையது ; பேசுதல்பற்றி இது நாவுடைப்பாவையென்றுஞ் சொல்லப்படும். இவற்றை, "கந்துடை நெடுநிலைக் கடவு ளெழுதிய, வந்திற் பாவை யருளு மாயிடின்" (கரு : ௩௩ - ச), "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, தந்துணைப் பாவையை" (கஎ : அகூ - கூ0), "நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக், கடவுளெழுதிய பாவையாங் குரைக்கும்" (உ0: கக0 - கக), "கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின், குடவயி னமைத்த நெடுநிலை வாயின், முதியாள் கோட்டம்" (உக: க -௩), "என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்" (உக: ௩ரு), "மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளோன்,றுவதிக னென்பேன் றுன்றமுதிர் கந்தின், மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" (உக: க௩0 - ௩௩), "நெடுநிலைக் கந்தினின்ற பாவை" (உஉ : உ), "இலகொளிக் கந்தி னெழுதிய பாவாய்" (உஉ: கூக), "நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலும்" (உஉ: கூச), "நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி" (உஉ: க0ச) என இந்நூலில் வருவனவற்றாலுணர்க. எழுதிய -பண்ணிய ; "கடவு ளெழுதவோர் கற்று ராரெனின்" (உரு : க௩0), "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்" (௸ : கசுகூ), "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (உசு : கச) எனச் சிலப்பதிகாரத்து வருதல்காண்க.

கூசு. மைத்தடங் கண்ணாள் - சுதமதி.

கூஎ. திப்பியம் : இது, திவ்யமென்னும் வடமொழிச்சிதைவு ; தேவலோகத்திலிருப்பதென்று பொருள் ; இவ்வாறு இறந்தகால எதிர்காலச் செய்திகளைக் கூறுதல் பெரும்பாலும் இவ்வுலகவழக்கமன்மையின், இதனை, 'திப்பியம்' என்றார். "செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம், பையரவல்குல் பலர்பசி களையக், கையி லேந்திய பாத்திரந் திப்பிய,முந்தை முதல்வி யடிபிழைத் தாயெனச், சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்" (ககூ: க0 - கச) என்று இந்நூலுள்ளே 'திப்பியம்' என்பது இப்பொருளில் வருதல் காண்க ; தெய்வக்கிளவியினால் திப்பியமுரைக்கும். தெய்வக்கிளவி - தெய்வத்தன்மையுள்ள சொல் ; வடசொல்லாலெனினுமமையும்.

(பி - ம்.) கூஎ - அ. 'கிளவி யிரவிவன்மகளொரு'

னிரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
க00 தயங்கிணர்க் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனோ டிந்நகர் புகுந்து
தாரை தவ்வை தன்னொடு கூடிய
க0ரு வீரை யாகிய சுதமதி கேளா
யின்றேழ் நாளி லிடையிருள் யாமத்துத்
தன்பிறப் பதனொடு நின்பிறப் புணர்ந்தீங்
கிலக்குமி யாகிய நினக்கிவை யாள்வரு
மஞ்சலென் றுரைத்த தவ்வுரை கேட்டு

---

கூஅ. இரவிவன்மன் - அசோதரநகரத்தரசன் ; இவன் சுதமதியென் பவளுடைய பூர்வஜன்மபிதா.

கூஅ - கூ. பூ. மணி. கக : கநந - ச. துச்சயன் = துர்ஜயன் - பகைவர்களால் வருத்தமுற்று வெல்லப்படுபவனென்று பொருள்; இவன் அங்கநாட்டிலுள்ள கச்சயமென்னு நகரத்தரசன் ; சுதமதியென்பவளுடைய பூர்வஜன்ம நாயகன்; மணி. க0 : ரு0 - ருச.

க00. தாரை - இவள் வீரைக்கு முன்னே பிறந்தவள்; வீரை யானையால் இறந்தது கேட்டு இவள் இறந்தமையால், 'சாவுற' என்றார்; மணி. கஉ : சரு - அ.

க0க. மயங்கி - மதுவைக் குடித்தமையால் மயங்கி.

க0உ. காராளர்சண்பை - அங்கநாட்டிற் கங்கைக்கரையிலுள்ளதாகிய சம்பாநகரம் ; இப்பொருளில், காராளரென்பது கராளரென்பதன் விகாரமென்றும், கொடுமையென்று பொருள்படுகின்ற கராளத்வம் அல்லது கராளதையென்பது இச்சொற்குப் பகுதியென்றும், இக்காராளர்கள் துர்க்காபூஜை செய்துநரபலிகொடுப்போரென்றும், இப்பெயர் இக்காலத்து மஹாராஷ்டிர தேசத்திற் கராடிகளென்று வழங்குகிறதென்றுங் கூறுவர்; மணி. ந : உகூ.

க0ச. தாரை தவ்வை - தாரையாகிய தவ்வை; தவ்வை - முன்பிறந்தவள். தாரை யென்பது மாதவியென்பவளுடைய பூர்வஜன்ம நாமதேயம்.

க0ரு. வீரையென்பது சுதமதியென்பவளுடைய பூர்வஜன்ம நாமதேயம்.

க0அ. இலக்குமியென்பது மணிமேகலையின் முற்பிறப்பின் பெயர்; தாரை, வீரை, இலக்குமி இம்மூவரும் சகோதரிகள்.

கCகூ. அஞ்சல் - அஞ்சாதே. தெய்வம் உரைத்தது.

(பி - ம்.) க0க. 'மயங்கியல் யானை' க0உ. 'காராளகசண்பை' க0ச. 'தாரைதவ்வை' க0ரு. 'சுதைமதி' க0சு. 'இன்றேளாளிடையிடை' க0எ - அ. 'உன்பிறப்புணர்ந்தீங், கலக்குமியாகிய'

௧௧௦ நெஞ்சு நடுக்குறூஉ நேரிழை நல்லாள்
காவ லாளர் கண்டுயில் கொள்ளத்
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப
வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப்
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்கப்
௧௧௫ புகர்முக வாரண நெடுங்கூ விளிப்பப்
பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்பப்
பணைநிலைப் புரவி பலவெழுந் தாலப்
பணைநிலைப் புள்ளும் பலவெழுந் தாலப்
பூம்பொழி லார்கைப் புள்ளொலி சிறப்பப்
௧௨௦ பூங்கொடி யார்கைப் புள்ளொலி சிறப்பக்
கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொளக்
கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடைகொளக்

---

௧௧௦. நல்லாள் - சுதமதி.

௧௧௨. சேக்கைத் துயில் கண் - படுக்கையில் தூங்குகின்ற ஆடவர் மகளிரென்னும் இருபாலாருடைய கண்கள்.

௧௧௩. வறிதெழுந்தார்ப்ப - பொருளின்றி முழங்க.

௧௧௪. புலம் - அறிவு. சங்கம் - புலவர் கூட்டம்.

௧௧௫. வாரணம் - யானை. நெடுங்கூவிளிப்ப - நெடியகூப்பீட்டைச் செய்ய; (மணி. ௭: ௬௭.) கூ - கூப்பீடு; "விளைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்" புறநா. ௪௪.

௧௧௬. வாரணம் - கோழி.

௧௧௭. பணை - குதிரைப்பந்தி. ஆல - ஆட.

௧௧௮. பணை - கிளை. ஆல-முழங்க.

௧௧௯. பூம்பொழில் ஆர்கைப் புள் ஒலி சிறப்ப - பொலிவு பொருந்திய சோலையினிடத்தே நிறைதலையுடைய பறவைகளின் முழக்கம் அதிகரிக்க.

௧௨௦. பூங்கொடியார் - மகளிர். புள் - கைவளை ; "புட்கை போகிய புன்றலை மகார்" மலைபடு. ௨௫௩.

௧௨௧. தெய்வங்களுக்குரிய பீடங்களிற் கொடுக்கப்படும் பொலிவு பெற்ற பலிகளானவை முடிவுகொள்ள.

௧௨௨. அணிகலங்கள் விற்கப்படுகின்ற அங்காடிவீதியில் மலராற் செய்யப்படும் அர்ச்சனைகளைக் கடையிடங்கள் கொள்ள; "பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி" (சிலப். ௨௮: ௨௩௧.) வாயில்களில் இல்லுறை தெய்வங்களின் பொருட்டுக் காலையிற் பூவிடுதல் மரபு.

(பி - ம்.) ௧௧௩. 'வலம்புரிசங்கம்' ௧௧௪. 'புலம்புரிசங்கம்', 'பொலம்புரிச்சங்கம்' ௧௧௭. 'ஆர்ப்ப' ௧௧௮. 'கணநிலைப்புள்ளும்...ஆர்ப்ப' ௧௨௧.'கடிகொள' ௧௨௨. 'பூப்பொலிகடிகொள'

குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழக்
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
கஉரு ஊர்துயி லெடுப்ப வுரவுநீ ரழுவத்துக்
காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலு
மேவுறு மஞ்ஞையி னினைந்தடி வருந்த
மாநகர் வீதி மருங்கிற் போகிப்
போய கங்குலிற் புகுந்ததை யெல்லா
கங௦ மாதவி தனக்கு வழுவின் றுரைத்தலு
நன்மணி யிழந்த நாகம் போன்றவ
டன்மகள் வாராத் தனித்துய ருழப்ப
வின்னுயி ரிழந்த யாக்கையி னிருந்தன
டுன்னிய துரைத்த சுதமதி தானென்.

எ.—துயிலெழுப்பியகாதை முற்றிற்று.

---

கஉங. தோற்கருவி வாசிப்பாருடைய இடங்களிலெல்லாம் செவ்வை செய்யப் பட்ட வாத்தியங்கள் பரவியெழ; பண் - இசையென்றுமாம்.

கஉச. உபகாரிகளுடைய வாயில்கள்தோறும் கொடுத்தற்குரிய பல பண்டங்களும் பரவுதலுற்றுமிக.

கஉரு. எடுப்ப - எழுப்ப. உரவுநீரழுவத்து - கடற்பரப்பில்.

கஉசா. சீத்து - அழித்து.

கஉஎ. ஏ - அம்பு; "சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல்" (ச: அசா) என்றார் முன்னும்.

கஉகூ. போயகங்குலில் - சென்ற இரவில்.

கஙக. "மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ, னன்மணி யிழந்த நாகம் போன்று" (உரு : ககூச - ரு) என்று இவ்வுவமையே பின்னும்வரும்; "இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியு, மருமணி யிழந்த நாகம் போன் றதும்" (சிலப். கங: ருஎ - அ.) அவள் - மாதவி.

கஙங. "இன்னுயி ரிழந்த யாக்கை யென்னத், துன்னிய சுற்றந் துயர்க் கடல் வீழ்ந்ததும்" (சிலப். கங: ருகூ - சா௦) என்புழியும் இவ்வுவமை வருதல் காண்க.

க-கஙச. மணிமேகலாதெய்வம் நீங்கித் தோன்றி உரைத்தபின் புகுந்து நீக்கி உரையென்று போயபின், சுதமதி எழுந்து கேட்டு உளங்கலங்கி நீங்கிப் போகி ஒருபுடையிருத்தலும், பாவை உரைக்கும்; அது 'வரும், அஞ்சல்' என்று உரைத்தது; அதனைக்கேட்டு நடுக்குறுநல்லாள், கதிரவன் முளைத்தலும் போகி மாதவிக்குரைத்தலும், அவள் துயருழப்பத் தான் உயிரிழந்த யாக்கை போல இருந்தனளென முடிக்க.

(பி - ம்.) கஉரு. 'எடுப்பிய', 'எழுப்பிய' கஉகூ. 'போகியகங்குல்' கஙஉ, 'மகவாரா'

எட்டாவது

# மணிபல்லவத்துத்துயருற்றகாதை

[எட்டாவது மணிமேகலை
மணிபல்லவத்துத்துயிலெழுந்து துயருற்றுபாட்டு.]

ஈங்கிவ ளின்னண மாக விருங்கடல்
வாங்குதிரை யுடுத்த மணிபல் லவத்திடைத்
தத்துநீ ரடைகரைச் சங்குழு தொடுப்பின்
முத்துவிளை கழனி முரிசெம் பவளமொடு
௫ விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்
ஞாழ லோங்கிய தாழ்கண் ணசும்பி
னாம்பலுங் குவளையுந் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
முடக்காற் புன்னையு மடற்பூந் தாழையும்
௧௦ வெயில்வர வொழித்த பயில்பூம் பந்த

---

௧. இவள் - சுதமதி.

௩. அடைகரையில். தொடுப்பு - விளாக்கொண்டு உழுதல்; "தொ டுப்பே ருழவ ரோதைப் பாணியும்" சிலப். ௨௭: ௨௩௦.

௩ - ௪. அடைகரையாகிய கழனியிலென்றுமாம்.

௫. விரைமரம் - சந்தனம் அகில் முதலியன; "விரைமர மென்றுகில்" என்பர்மேலும் (௧௬: ௧௨௨) "வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்" **சிறுபாண்.** ௧௫௫.

௬. ஞாழல் - புலிநகக்கொன்றை; "பொன்னுறு ஞாழற் பூவுடன் கடுக் கும், பேழ்வாய்ப் புலியுகிர்" (கல். ௫௨.) அசும்பு - சேறு; "வாரசும் பொ ழுகு முன்றில்" **புறநா.** ௧௧௪.

௭. மயங்கி - கலந்து.

௮. குண்டு நீர் இலஞ்சி - ஆழமான நீரையுடைய பொய்கைக்கரை; இலஞ்சி, ஆகுபெயர்.

௯. முடம் - வளைவு. ௧௦. பந்தர் - நிழல்.

௯ - ௧௦. புன்னையும் தாழையும் வெயிலின் வரவையொழித்த பந்தர்.

(பி - ம்). ௧. 'ஈங்கிவரிங்ஙனம்', 'ஈங்கிவரிஞ்ஞனம்' ௪. 'முத்துவினை கழனி' ௫. 'வரைமாமுருட்டு' ௬. 'தாழ்கண்ணசுரும்பி'

ரறல்விளங்கு நிலாமண லுறுமலர்ப் பள்ளித்
துஞ்சு துயிலெழூஉ மஞ்சி லோதி
காதற் சுற்ற மறந்து கடைகொள
வேறிடத்துப் பிறந்த வுயிரே போன்று
கரு பண்டறி கிளையொடு பதியுங் காணள்
கண்டறி யாதன கண்ணிற் காணூ
நீல மாக்கட னெட்டிடை யன்றியுங்
காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப
வுவவன மருங்கினி லோரிடங் கொல்லிது
௨௦ சுதமதி யொளித்தாய் துயரஞ் செய்தனை
நனவோ கனவோ வென்பதை யறியேன்
மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்
வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கு
மெல்வளை வாராய் விட்டகன் றனையோ
உரு விஞ்சையிற் றோன்றிய விளங்கிழை மடவாள்
வஞ்சஞ் செய்தனள் கொல்லோ வறியே

கக. அறல் - நீர் அரித்து ஒழுகுதலாலுண்டாவது; "மட்டற னல்யாற்று" (புறநா. கஎஎ.) நிலாமணல் - நிலாவைப் போன்ற வெள்ளிய மணல். மலர்ப்பள்ளி - உதிர்ந்து கிடக்கும் மலராலாகிய படுக்கையில்.

க௨. அஞ்சிலோதி - அழகிய சிலவாகமயிரினையுடையாள் ; "அஞ்சி லோதி யரசனுக் கொருநாள்" (௨௩ : ௨௪)என்பர் மேலும்;"அஞ்சி லோதி" குறிஞ்சி. க௯௦.

க - க௨. மணிபல்லவத்திற் கரையிற் கழனியிற் பரப்பில் இலஞ்சிக் கரையில் மணலிற் பள்ளியில் துயிலெழுந்த மணிமேகலை யென்க.

க௩. கடைகொள - முடிவுகொள்ள. கரு. காணள் - காணளாகி.

க௬. கண்டறியாதனவற்றைக்கண்ணிற் கண்டு.

கஎ. நெட்டிடை - நெடிய இடம்.

க௯. 'உவவனம்' என்பது முதல் மணிமேகலை கூற்று.

௨௦. சுதமதி, விளி. ௨க. இந்தநிலை நனவோ கனவோ.

௨௩. மயங்கும் - மயங்குவாள்.

௨௪. மெல்லிய வளையினையுடையாய் ; எல்வளையுமாம்.

௨ரு. விஞ்சையிற் றோன்றிய - வித்தையினாலே தோன்றிய.

(பி - ம்.) கக. 'துறல்விளங்கு நிலாமணற்றுமலர்' க௪. 'ஓதிடத்து' கரு. 'பதியங்காணள்' க௬-எ. 'காண,நீலமாகடல்' க௯. 'காலஞாயிறு' ௨௦. 'ஒழித்தாய்'

ஒருதனி யஞ்சுவென் றிருவே வாவெனத்
திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையு
மெழுந்துவீழ் சில்லையு மொடுங்குசிறை முழுவலு
௧௦ மன்னச் சேவ லரச னாகப்
பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசறை மன்னர் பாடி போல
வீசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்குந்
துறையுந் துறைசூழ் நெடுமணற் குன்றமும்
௧௫ யாங்கணுந் திரிவோள் பாங்கினங் காணாள்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ
வரற்றினள் கூஉ யழுதன ளேங்கி
வீழ்துய ரெய்திய விழுமக் கிளவியிற்

உஎ. ஒருதனி - ஒப்பற்றதனிமையை. வாவென - வாவென்று சொல்லிக்கொண்டு.

உஅ - கூ. அலையில் தவழ்ந்துசெல்லும் பறவைமுதலிய நீர்வாழ் பறவைச் சாதிகள் நான்கும்.

உஅ - ௧௧. திரைதவழ் பறவைமுதலியனவாகிய பன்னிறப் புள்ளினம்.

௧௨. போர்குறித்துவந்து படைவீடுகளில் விட்ட பகையரசரிருவருடைய படைகளிரண்டும் எதிரெதிரிருத்தல்போல. பாடி - படைவீடு.

உஅ - ௧௪. திரைதவழ்பறவை முதலியன, அன்னச்சேவல் அரசனாக நீர்ப்பரப்பில் எதிரெதிரிருக்குந் துறையென்க. இப்படியே, "கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முள்ளூ ரூரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்" (௧௦ : ௧௧௪ - கூ) என்றார் சிலப்பதிகாரத்தும்.

௧௪ - ௫. துறையும் குன்றமுமாகிய யாங்கணும். திரிவோள் - மணிமேகலை. பாங்கினம் - பக்கத்திலுள்ள இனங்களை.

உஎ - ௧௫. திருவே வாவெனத் திரிவோள்.

௧௬. குரற்றலைக் கூந்தல் - பூங்கொத்தை இடத்தேயுடைய கூந்தல்; "குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்தி" (சிலப். ௧௪ : அஎ); "குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ" ௸. ௨௦ : ௧அ.

௧எ. கூஉய் - கூவி.

௧அ. விழுமக்கிளவியின் - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்களால்.

(பி-ம்.) உஎ. 'அஞ்சுவானதிவேவாவெனத்' உகூ. 'சிலாலையுமொடுங்குசிறைமுழவலும்', 'ஒடுங்குசிறைமூழ்யும்' ௧௧. 'புள்ளும்பரந்து' ௧௩. 'நெறியெதிர்நிற்கும்', 'எதிரெதிர்நிற்கும்' ௧௬. 'குரற்றலைகூந்தல்' ௧அ - கூ. 'விழுக்கிளவியற்றுழ்ந்து'

உ0 றுன்பங் கொள்ளே லென்றவள் போயபின்
கையாற் றுள்ளங் கரந்தகத் தடக்கிப்
பொய்யாற் றொழுக்கங் கொண்டுபுற மறைத்து
வஞ்சஞ் செய்குவன் மணிமே கலையையென்
றஞ்சி லோதி யரசனுக் கொருநாட்
௨௫ பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்
தறிவு திரிந்தோ னரசிய றுனிலன்
கரும்புடைத் தடக்கைக் காமன் கையற
வரும்பெற லிளமை பெரும்பிறி தாக்கு
மறிவு தலைப்பட்ட வாயிழை தனக்குச்
௩0 சிறைதக் கன்று செங்கோல் வேந்தெனச்

---

உ0. கொள்ளேல் - கொள்ளாதே. அவள் - வாசந்தவை.

இராசமாதேவி, அரசனையடைந்து மணிமேகலையைச் சிறைமீட்டு உடன்கொண்டு சென்று தன் காவலில்வைத்து வஞ்சித்தல் இனிக்கூறப் படும்.

உக. கையாற்றுள்ளங்கரந்து - செயலறவினையுடைய உள்ளத்தை மறைத்து ; என்றது புத்திரசோகத்தை வெளிப்படுத்தாமலென்றபடி.

உஉ. பொய்யாற்றொழுக்கங் கொண்டு - பொய்வழிக்கண் ஒழுகுதலைக் கொண்டு. புறமறைத்து - புறத்தே தோன்றாமல் மறைத்து ; என்றது மணிமேகலையை வஞ்சித்தற்கெண்ணிய தனது தீயவெண்ணத்தை ஒரு வாற்றானும் வெளிப்படுத்தாமலென்றபடி.

உ௩. மணிமேகலையை வஞ்சஞ்செய்குவேனென்று கருதி.

உச. அஞ்சிலோதி - அழகிய சிலவான கூந்தலையுடைய இராசமா தேவி.

உ௫. கோலத்து - வேடத்தைக்கண்டு.

உ௬. அறிவுதிரிந்தோன் - அறிவு வேறுபட்ட உதயகுமரன்.

உ௭. கையற - செயலற.

உ௮. இளமை - இளமையை. பெரும்பிறிதாக்குதல் - பயன்படாது கெடச்செய்தல்.

உ௭ - ௮. கையறப் பெரும்பிறிதாக்குமென்க.

உ௯. தலைப்பட்ட - நேர்பட்ட; முதன்மைப்பட்டவென்றுமாம்.

௩0. தக்கன்று - தக்கதன்று; விகாரம். வேந்து, அண்மைவிளி. என என்று இராசமாதேவி சொல்ல.

உச - ௩0. அஞ்சிலோதி ஒருநாள் அரசனுக்குச் சிறைதக்கன்றென வென்க.

(பி - ம்.) உ௬. ‘அறவியறிரிந்தோன்’

சிறப்பின் பாலார் மக்க ளல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க் கென்ப
தறிந்தனை யாயினிவ் வாயிழை தன்னைச்
செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல
௩௫ வென்னோ டிருப்பினு மிருக்கவிவ் விளங்கொடி
தன்னோ டெடுப்பினுந் தகைக்குந ரில்லென்
றங்கவ ளனைக்கூஉ யவடன் னோடு
கொங்கவிழ் குழலாள் கோயிலுட் புக்காங்
கறிவு திரித்திவ் வகனக ரெல்லா
௪௦ மெறிதரு கோலம்யான் செய்குவ லென்றே
மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா
ளயர்ப்பது செய்யா வறிவின ளாகக்

---

௩௧ - ௨. சிறப்பின்பாலார் மக்கள் - கல்விமுதலியவிசேடமுடைய வர்கள் புதல்வர். அல்லார் மறப்பின்பாலார்- அல்லாதவர்கள் மறத்தற்குரிய வர். என்பது - என்று பெரியோர்கூறுதலை; இவ்வடிகளின் கருத்து, "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்,.........ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும், மூத்தோன் வருக வென்னா தவரு, ளறிவுடை யோனா றரசுஞ் செல் லும், வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே" (புறநா.கஅ௩) என்பதன் பொருளை யும், "அரம்போலும்" (குறள். கூகூ௭) என்பதன் பொருளையும் ஒருவாறு தழுவி வந்திருத்தல்காண்க.

௩௩. ஆயிழை - மணிமேகலை.

௩௪. சிறைநோய் - சிறைத்துன்பம். தீர்க்கென்று - தீர்க்கவென்று. இறை - அரசன்.

௩௬. தன் ஓடு எடுப்பினும் - தனக்குரிய ஓட்டையேந்திப் பிச்சைக்குப் புகுவாளாயினும். தகைக்குநர் இல் - தடுப்பவர்களில்லை; "அணித்தகை யுடம்பு" (சீவக. ககஎ௨.) என்று - என்றுகூறி.

௩௭. அவடனைக்கூஉய் - மணிமேகலையை யழைத்து.

௩௮. குழலாள் - இராசமாதேவி.

௩௭ - ௮. குழலாள் அவளோடு கோயிலுட்புக்கு.

௩௯. அறிவுதிரித்து - அறிவைமருந்தால் வேறுபடச்செய்து ; பித்தாக் கியென்றபடி.

௪௦. எறிதருகோலம் - அடிக்குங்கோலத்தை; கல்லெறியுங் கோலத்தை யென்றுமாம். செய்குவலென்று - இவளுக்குச் செய்வேனென்று கருதி.

௪௧. மயற்பகையூட்ட - பித்தேறுதற்குக் காரணமாகிய மருந்தை யூட்ட; "வஞ்ச மூண்டு மயற்பகை யுற்றோர்" (சிலப். ரு: ௪௨௨.) உணர்ந் தாள் - மணிமேகலை.

௪௨. அயர்ப்பது - மறப்பது.

௪௧ - ௨. "மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே, னயர்ப்பது

கல்லா விளைஞ னொருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைதன்
௪௫ வீணைவள ரிளமுலை யேந்தெழி லாகத்துப்
புணர்குறி செய்து பொருந்தின ளென்னும்
பான்மைக் கட்டுரை பலர்க்குரை யென்றே
காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப
வாங்கவன் சென்றவ் வாயிழை யிருந்த
௫0 பாங்கி லொருசிறைப் பாடுசென் றணைதலுந்
தேவி வஞ்ச மிதுவெனத் தெளிந்து
நாவியன் மந்திர நடுங்கா தோதி
யாணமை கோலத் தாயிழை யிருப்பக்
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
௫௫ யரச ருரிமையி லாடவ ரணுகார்

செய்யா வறிவினே னாயினேன்" (கூஉ - ௩) என்று பின்பு வருதல்காண்க. உணர்ந்தார் அறிவினாராக.

௪௪. வல்லாங்குச்செய்து - வல்லபடி செய்து; "வடியா நாவின் வல்லாங்குப் பாடி" புறநா. ௪௭.

௪௮. காணம் - பழங்காசு (சீவக. ககக௭-உரை.) கைந்நிறைகொடுப்ப - கைந்நிறையக்கொடுப்ப; நிறை, விகாரம்; 'நிலநெளி பரந்த வன்றே' (சீவக. ௪௩௩) என்பதில் 'நெளி' என்பதுபோல.

௪௩ - ௮. ஒருவனைக்கூஉய், 'வல்லாங்குச் செய்து புணர்குறிசெய்து பொருந்தினளென்னுங் கட்டுரையைப் பலர்க்கும் உரை' என்றுகூறிக் காணம்பலவும் கொடுப்பவென்க.

௪௯. ஆயிழை - மணிமேகலை.

௫0. பாங்கில ஒருசிறைப் பாடு - அழகில்லாத ஒரு பக்கத்திலிடத்தே; பக்கத்துள்ள ஒரு காவலிடத்தென்றுமாம்.

௪௯ - ௫0. அவன்சென்று பாடுசென்றணைதலுமென்க.

௫௧. தேவி - இராசமாதேவி. இது - இவ்விளைஞன் வந்தது.

௫௨. நாவியல் மந்திரம்- நாப்புடை பெயருமளவிலே உச்சரிக்கப்படும் மந்திரம்; என்றது வேற்றுருவெய்துவிக்கு மந்திரத்தை; "ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி, நாவியன் மருங்கி னவிலப் பாடி" முருகு. க௮௬- ௭.

௫௧ - ௩. ஆயிழை இது தேவிவஞ்சமெனத்தெளிந்து மந்திரத்தை ஓதிக்கோலத்துடனிருப்பவென்க.

௫௫. அரசருரிமையில் ஆடவரணுகார் -அரசருடைய தேவிமாரிருக்கும் அந்தப்புரத்தில் ஆண்மக்கள் குறுகார்; "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" (நெடுநல். க0௭); அந்தப்புரத்தை, 'குழைமுகப்புரிசை' (சீவக. உ௭௫) என்பர் திருத்தக்கதேவர்.

(பி - ம்.) ௫௩. 'ஆண்மைக்'

நிரயக் கொடுமக ணினைப்பறி யேனென்
றகநகர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தாளை வைப்ப தென்னென்
றுய்யா நோயி னூணொழிந் தனளெனப்
௬0 பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறை யடைப்ப
வூணொழி மந்திர முடைமையி னந்த
வாணுதன் மேனி வருந்தா திருப்ப
வையென விம்மி யாயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தே
௬௫ னென்மகற் குற்ற விடுக்கண் பொறாது
பொன்னே ரனையாய் பொறுக்கென் றனடொழ

௫௬. நரகத்தையடைதற்குரிய கொடுமையையுடைய இவளது தீய வெண்ணத்தை நானறிந்திலேனெனக் கருதி; இராசமாதேவி வியபிசரிக் கும் கருத்துடையாளென்று புலவிலோன் கருதினன்போலும்.

௫௭. அகநகர் - அந்தப்புரம்.

௫௪ - ௭. காணம்பெற்றேன், துபரொய்தி அறியேனென்று கைவிட்டுப் போயபினென்க.

௪௩ - ௫௭. மணி. உ௩ : ௯௪ - ௫.

௫௮. உதயகுமரனுக்குக் காமநோயை உண்டாக்கிக் கொல்லுவித்த இவளைஉயிருடன் வைத்தல நமதன்பிற்கு யாதுபயனென்று இராசமாதேவி கருதி; வைத்தல் - வஞ்சித்தலுமாம்.

௫௯. உய்யாநோயின் - உயிரைத்தாங்கியிராமைக்குக் காரணமாகிய நோயினால்; மருந்தாற் போக்கவொண்ணாத நோயினாலென்றுமாம்.

௬0. புழுக்கறை - புழுங்கச்செய்யும்அறை; "புழுக்கறைப் பட்டோர் போன்று" (௩ : ௯௫) என்றார் முன்னும்.

௫அ - ௬0. (இராசமாதேவி) வைப்பதென்னென்று காட்டி அடைப்ப வென்க.

௬௨. வாணுதல - மணிமேகலை. ௫௮ - ௬௨. மணி. உ௩ : ௯௬ - ௭.

௬௩. ஐயெனவிம்மி - விரையப்பொருமி; "ஐயென வளைப்ப" (சீவக. ௪௪அ); "மோதிரந்தொட் டையென...நோக்கினார்" (ஷை. ௧0௪0.) ஆயிழை - இராசமாதேவி.

௬௪. செய்தவத்தாட்டியை - மணிமேகலைக்கு; ஐ, உருபுமயக்கம். சிறுமை - குற்றம்; என்றது மயற்பகையூட்டியது முதலிய மூன்றனையும்.

௬௪ - ௫. பொறாது செய்தேனென்க.

௬௬. பொன்னேரனையாய் - திருமகளின்மறுதலைபோல்வாய்; திருமக ளுக்குநேராகிய அத்தன்மையையுடையாயெனினுமமையும் (மணி. உ : ௧௬); "கோளரிக்கு நிகரன்னார்" (திருச்சிற். உஉ௫.) அவள் - இராசமாதேவி.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

(பி - ம்.) ௫௬. 'நினைப்பதறியேனென்று'

நீல பதிதன் வயிற்றிற் றோன்றிய
வேலங் கமழ்தா ரிராகுலன் றன்னை
யழற்க ணாக மாருயி ருண்ண
௭௦ விழித்த லாற்றே னென்னுயிர் சுடுநாள்
யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
யுடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
வுடற்கழு தனையே லுன்மகன் றன்னை
௭௫ யெடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
யுயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
யெவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டும்
௮௦ மற்றுன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை
யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை

---

௬௭ - ௮. தோன்றிய இராகுலன்றன்னை.

௬௯. அழற்கணாகம் - திட்டிவிடமென்னும் பாம்பு; அழல் - விடம்; "ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்க லுற்றார்" (சீவக. ௭௪௬); "அழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்" சிலப். ௫: ௧௨௪.

௭௦. விழித்தல் - உயிர் வாழ்தல்; நாகத்தின் தொழிலாக்கினுமமையும்.

௭௧. இளங்கோன்றனக்குயாங்கிருந்தழுதனை; அழுதிலாயென்றபடி.

௭௫. புறங்காடு - மயானம்.

௭௬. புக்கில் - புகுமிடமாகிய உடம்பு; "நோக்கார்கொ லொய்ய தோர் புக்கிலை" நாலடி. ௪௧.

௭௭. வினையென்றது, நல்வினை தீவினையென்னுமிரண்டையும்.

௭௬ - ௭. வினையால் உயிர் புகும்புக்கில் தெரிந்துணர்வரியதென்க.

௭௮. அன்பினையாயின் - அன்பினையுடையாயாயின்; ஆய்தொடி, விளி.

௭௯. எவ்வுயிர்க்காயினும் - எல்லாவுயிர்க்கும்.

௮௦. மாபெருந்தேவி - இராசமாதேவி; விளி.

௮௧. கோபித்த காஞ்சனன் கொலைசெய்ததற்குக் காரணமான தீவினையைக்கேள்.

௮௩. உடம்பைத்துண்டமாகவெட்டியமையால் தோன்றியெழுந்த வலிய தீவினை.

(பி - ம்.) ௭௦. 'இழிதலாற்றேன்' ௭௫. 'ஈமப்புறங்காடு' ௭௭. 'செயற்பாட்டுவினை' ௮௩. 'உருத்தெழுமவ்வினை', 'உருத்தெழுபாவம்'

நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி
அரு விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே
யாங்கறிந் தனையோ வீங்கிது நீயெனிற்
பூங்கொடி நல்லாய் புகுந்த திதுவென
மொய்ம்மலர்ப் பூம்பொழில் புக்கது முதலாத்
தெய்வக் கட்டுரை தெளிந்ததை யீரு
கூ0 வுற்றதை யெல்லா மொழிவின் றுரைத்து
மற்று முரைசெயு மணிமே கலைதான்
மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே
னயர்ப்பது செய்யா வறிவினே னாயினேன்
கல்லாக் கயவன் காரிருட் டான்வர
கூரு நல்லா யாணுரு நான்கொண் டிருந்தே
னூழொழி மந்திர முடைமையி னன்றே
மாணிழை செய்த வஞ்சம் பிழைத்த
தந்தரஞ் சேறலு மயலுருக் கோடலுஞ்

அச. அரவின் - அரவினால். நல்லுயிர் வாங்கியென்றது, முற்பிறப்பின் செய்தியை.

அரு. வீட்டியது - கொன்றது; வீழ்த்தியதென்பதன் மரூஉவுமாம்.

அங - ரு. வினை, முற்பிறப்பில் உயிரை அரவின்வாங்கி இப்பிறப்பில் விஞ்சையன்வாளால் வீட்டியது.

அசா. இது - இச்செய்தியை. அஎ. புகுந்தது - சம்பவித்தது.

அஅ. பொழில் - உவவனம்.

அகூ. தெய்வக்கட்டுரை - கந்திற்பாவைத்தெய்வங் கூறிய பொருள் பொதிந்த சொல்.

கூ0. ஒழிவின்று - விடாமல். அஎ - கூ0. இதுவெனவுரைத்தென்க.

கூக. மணிமேகலை பின்னும் சொல்லுவாள்.

கூங. அயர்ப்பது - மறப்பது.

கூச. கயவன் - கீழ்மகன்; கொடியவனுமாம். இருள் - இருளில்.

கூரு. நான் ஆணுருக்கொண்டிருந்தேன்.

கூச - ரு. மணி. உ.ங : சங - ருள.

கூஎ. வஞ்சம் - ஊணொழிந்தனளென்று பொய்ந்நோய்காட்டிப் புழுக் கறையடைத்தது. பிழைத்தது - தப்பியது.

கூசா - எ. மந்திரமுடைமையினன்றோ வஞ்சம் பிழைத்தது.

கூஅ. அயலுருக்கோடல் - வேற்றுருவங் கொள்ளல்.

(பி - ம்.) கூசா. 'உடைமையினன்றோ'

சிந்தையிற் கொண்டிலேன் சென்ற பிறவியிற்
௧௦௦ காதலற் பயந்தோய் கடுந்துயர் களைந்து
தீதுறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டாற்
றையா லுன்றன் றடுமாற் றவலத்
தெய்யா மையறீர்ந் தின்னுரை கேளா
யாள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டுக்
௧௦௫ காருக மடந்தை கணவனுங் கைவிட
வீன்ற குழவியொடு தான்வே றாகி
மான்றோர் திசைபோய் வரையாள் வாழ்வுழிப்
புதல்வன் றன்னையோர் புரிநூன் மார்பன்
பதியோ ரறியாப் பான்மையின் வளர்க்க

கூஅ - ௧௦௧. போனபிறப்பில் எனக்குக் கணவனாயிருந்தோனே இப் பிறப்பிற் பெற்ற உனது துயரைக்களைந்து வினையைத் தீர்த்தற்பொருட்டே சேறலும் கோடலும் சிந்தையிற் கொண்டிலேனென்க.

௧௦௨. தையால், விளி.

௧௦௨ - ௩. தடுமாற்றவலத்தெய்யாமையல் - தடுமாறுதற்குக் காரணமாகிய வருத்தத்தைச்செய்யும் அறியாமையாகிய மயக்கம்; மையல் - செல்வச்செருக்குமாம்; "மையன்மத யானைநிரை மன்னன்" சீவக. ௫அ௬.

மேல், காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய இவ்வைந்தும் நீக்கற் பாலனவென்று இராசமாதேவிக்கு மணிமேகலை உபதேசித்தல் முதலியன கூறப்படும்.

௧௦௪. அரசர் கொடுங்கோல் செலுத்துதலால், யாவரும் தத்தம் நிலை தடுமாறிய நல்ல நாட்டில்; கலி. ௫.

௧௦௫. காருகமடந்தை - இல்லறவொழுக்கினளாகியவொருத்தி; நெய்வோர் குலத்துப் பிறந்த ஒருத்தியென்றுமாம். கைவிட - துறக்க.

௧௦௬. குழவியும் தானும் வெவ்வேறிடத்துப் பிரிவுற்று.

௧௦௭. மான்று - மயங்கி. வரையாள் - தன்னலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரையறையில்லாளாய்.

௧௦௪ - ௭. நாட்டிற் காருகமடந்தை கணவன் கைவிடுதலால் வேறாகி மான்று போய் வரையாளாய் வாழ்வுழியென்க. இல்லறவொழுக்கினளாகிய இவள் கற்பொழிந்து வரைவின்றி வாழ்தற்கு அரசனது கொடுங்கோன்மை காரணமாதலின், 'ஆள்பவர் கலக்குற' என்பது கூறப்பட்டது; "மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன்காவ லின்றெனி னின்றால்" (௨௨ : ௨௦அ - ௯) என்று இக்கருத்து முன்பு வந்திருத்தல் காண்க.

௧௦அ - ௯. புரிநூன்மார்பன் புதல்வன்றன்னை வளர்க்க.

கக௦ வாங்கப் புதல்வ னவடிற மறியான்
றான்புணர்ந் தறிந்துபின் றன்னுயிர் நீத்தது
நீர்நசை வேட்கையி னெடுங்கட முழலுஞ்
சூன்முதிர் மடமான் வயிறுகிழித் தோடக்
கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப
ககரு மான்மறி விழுந்தது கண்டுமன மயங்கிப்
பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய னாகி
யுயிர்ப்பொடு செங்க ணுகுத்த நீர்கண்
டோட்டி யெய்தோ னோருயிர் துறந்ததுங்
கேட்டு மறிதியோ வாட்டடங் கண்ணி
கஉ௦ கடாஅ யானைமுன் கட்கா முற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வ
துண்ட கள்ளி னுறுசெருக் காவது
கண்டு மறிதியோ காரிகை நல்லாய்

கக௦. ஆங்கப்புதல்வன் - அங்ஙனம் வளர்க்கப்பட்ட புதல்வன்; அவள்திறம் - அவள் தன்னுடைய தாயென்னுந் தன்மையை.

ககக. பின்னறிந்தென்க.

ககஉ. நீர்நசை வேட்கையின் - நீரை நச்சிய விருப்பத்தால்; நசை வேட்கை, வினைத்தொகை; "நின்னசை வேட்கையி னிரவலர் வருவதை" (புறநா. ங.) கடம் - காடு.

ககங. சூல் - கருப்பம். ககச. துரப்ப - செலுத்த.

ககரு. மான்மறி - பெண்மான்; மான்குட்டியுமாம்.

ககசு. பயிர்க்குரல் - பயிராகியகுரல்; பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் ஓசைக்குறிப்பு; "மடமா னாகு பிணைபயி ரழைப்பின்" (புறநா. கருஎ.) அதன் பான்மையனாகி - அதன் பக்கத்தோனாய்.

ககஅ. ஓட்டியெய்தோன் - வேட்டுவன்; சுட்டு.

ககக - க௯. நீத்ததும் துறந்ததும் கேட்டுமறிதியோ; இதனால் காமத்தையும் கொலையையும் நீத்தல் வேண்டுமென்பது கூறப்பட்டது.

கஉ௦. கடாஅயானை-மதயானை; "கடாஅக் களிற்றின்மேல்" (குறள். க௦அஎ.) கட்காமுற்றோர் - கள்ளை விரும்பியுண்டுகளித்தோர்.

கஉக. கோடு - கொம்பு.

கஉ௦ - உங. கட்காமுற்றோர் இங்ஙனமாதலை, "புதுக்கோள் யானை முன் போற்றாது சென்று, மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉம்" (மணி. கஉ: சரு - சு) என்றதனாலுமுணர்க.

(பி - ம்.) ககஅ. 'ஓட்டியெய்தோன்'

பொய்யாற் றொழுக்கம் பொருளெனக் கொண்டோர்
கஉ௫ கையாற் றவலங் கடந்தது முண்டோ
களவேர் வாழ்க்கைய ருறூஉங் கடுந்துய
ரிளவேய்த் தோளாய்க் கிதுவென வேண்டா
மன்பே ருலகத்து வாழ்வோர்க் கிங்கிவை
துன்பந் தருவன துறக்கல் வேண்டுங்
கரு௦ கற்ற கல்வி யன்றாற் காரிகை
செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போ
ரல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
கரு௫ வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யாரென
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேவ ரோதி செவிமுதல் வார்த்து

கஉச. பொய்யாற்றொழுக்கம் - பொய்வழிக்கணொழுகுதல். பொருளெனக் கொண்டோர் - காரியமாகக்கொண்டோர்.

கஉ௫. கையாற்றவலம் - செயலறவாகிய துன்பம்.

கஉசு. களவேர்வாழ்க்கையர் - களமே உழவுபோலும் இல்வாழ்க்கைப் பொருளாகவுடையோர்; "கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோர்" (பெரும்பாண். சO - சக.) கடுந்துயர் - மிக்கதுன்பம்.

கஉஅ. இவை - காமமுதலிய இவ்வைந்தும்.

கரு௦. கல்வி காரிகை அன்று - கல்வி அழகுடைத்தன்று; என்றது பின்பு கூறப்படும் நற்குணங்களில்லாதவழிக் கல்வி அழகுடையதன்றென்ற வாறு. இவ்வடியை முன்னுள்ள அடியோடு கூட்டித் துன்பம் தருவனற்றைத் துறவாவழிக் கல்வி அழகுடைத்தன்றென்று பொருள்கூறினும் பொருந்தும்.

கரு௩. அல்லன்மாக்கட்கு - வறுமைத்துன்பமுடையார்க்கு.

கருஉ - ௩. நிரப்புநரே வாழ்வோரென்போர்.

கருச. எல்வளை, விளி.

கருச - ௫. அரும்பசி களைந்தோரே செல்லுலகறிந்தோர்.

கருசு. துணிபொருள் - பரமார்த்த தத்துவஞானம்.

கருசு - எ. அன்பொழியாரே துணிபொருளுணர்ந்தோர்.

கருஅ. ஞானநன்னீர் - ஞானமாகிய நல்லநீரை. நன்கனம் - நன்றாக.

கருக. தேவரோதி - இராசமாதேவி. செவிமுதல் - செவியிடம்.

(பி - ம்.) கரு௩. 'நிரப்பினர்'

௧௪௰ மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
வகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்பத்
தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
மாறுகொண் டோரா மனத்தின ளாகி
யாங்கவ டொழுதலு மாயிழை பொறாஅ
௧௪௫ டான்றொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோ யன்றியுங் காவலன்
மாபெருந் தேவியென் றெதிர்வணங் கினளென்.

உ௩.—சிறைவிடுகாதை முற்றிற்று.

---

௧௪௰. மகன்றுயர் - புதல்வனிறந்த துயரம்; (புத்திரசோகம்.)

௧௪௧. அகம் - உள்ளிடம். ஆயிழை - மணிமேகலை.

௧௩௮-௪௧. ஞானநீரைத்தெளித்துவார்த்து வெந்தீயை அவிப்பவென்க.

௧௪௨. தேறு - தேற்றாங்கொட்டை.

௧௪௩. மாறுகொண்டு - பகைமைகொண்டு.

௧௪௪. ஆங்கவள் - இராசமாதேவி. ஆயிழை - மணிமேகலை.

௧௪௬. காதலற்பயந்தோயன்றியும் - என்து பூர்வஜன்ம நாயகனை இப் பிறப்பிற் பெற்றதல்லாமலும்.

௧௪௬-௭. காவலன் மாபெருந்தேவியென்று - அரசனது பட்டமகிஷி யாகவுமுள்ளாயென்று.

க-௧௪௭. வாசந்தவையென்னுமூதாட்டி, மொழியினள், அவள் மன்னவ னருளாற் சென்றெய்தித் தொழுது முன்னின்று வாழ்த்தி, 'மன்னவன் றன் முன் துன்பங்கொள்ளேல்' என்று போயபின், அஞ்சிலோதி கரந்து அடக்கிக் கொண்டு மறைத்து 'மணிமேகலையை வஞ்சஞ்செய்குவல்' என்று ஒருநாள் அரசனுக்கு, 'சிறைதக்கன்று' என, 'நீக்க' என்று இறைசொல, குழலாள் அவளைக்கூஉய்ப் புக்கு 'செய்குவல்' என்று ஊட்ட, அறிவினளாக, கொடுப்ப, அணைதலும், இருப்ப, போயபின், அடைப்ப, இருப்ப, அவள் தொழ, மணிமேகலை ஒழிவின்றுரைத்து மறநெறிமுறை செய்யும்; அங்ஙன முறைசெய்பவள் அவிப்ப, அவள் தொழுதலும், ஆயிழை பொறாஅளாய் 'மாபெருந்தேவி' என்று எதிர்வணங்கினளென வினைமுடிவுசெய்க.

இருபத்துநான்காவது

# ஆபுத்திரனுடனடைந்தகாதை.

[இருபத்துநான்காவது மணிமேகலை மாநகரோழிந்து ஆபுத்திரனுடனடைந்தபாட்டு.]

மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த
தொன்முது கணிகைதன் சூழ்ச்சியிற் போயவன்
விஞ்சையன் வாளின் விளிந்தோ னென்பது
நெஞ்சு நடுக்குறக் கேட்டுமெய் வருந்தி
ரு மாதவி மகடனை வான்சிறை நீக்கக்
காவலன் றேவி காற்கீழ் வீழ்ந்தாங்
கரவே ரல்கு லருந்தவ மடவா
ருரவோற் களித்த வொருபத் தொருவரு
மாயிரங் கண்ணோ னவிநயம் வழூஉக்கொள
கo மாயிரு ஞாலத்துத் தோன்றிய வைவரு
மாங்கவன் புதல்வனோ டருந்தவன் முனிந்த
வோங்கிய சிறப்பி னொருநூற்று நால்வருந்
திருக்கிளர் மணிமுடித் தேவர்கோன் றன்முன்
னுருப்பசி முனிந்த வென்குலத் தொருத்தியு
கரு மொன்று கடைநின்ற வாறிரு பதின்மரித்

க. மன்னகுமரனை - உதயகுமரனை. புணர்த்த - சேர்த்திய.

உ. முதுகணிகை - சித்திராபதி; எழுவாய்; தொன்முது, ஒருபொருட் பன்மொழி. போயவன் - உதயகுமரன்.

ந. விளிந்தோன் - இறந்தான்.

ரு. மாதவிமகடனை - மணிமேகலையை. நீக்க - நீக்குதற்பொருட்டு.

சு. காவலன்றேவி - இராசமாதேவி. ரு - சு. நீக்க வீழ்ந்து.

உ - சு. கணிகை, விளிந்தோனென்பதைக் கேட்டு வருந்தி வீழ்ந்து.

எ. 'அரவேர்' என்பது முதலியன சித்திராபதிகூற்று.

கக. புதல்வன் - சயந்தன். கரு. நூற்றிருபத்தொருவர்.

(பி - ம்.) ரு - சு. 'சிறைதவிர்த்த, காதலன்றேவி' கரு. 'நூன்றுகடையிட்ட'

தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாண்முதல்
யானுறு துன்ப மியாவரும் பட்டிலர்
மாபெருந் தேவி மாதர் யாரினும்
பூவிலை யீத்தவன் பொன்றின னென்று
உ0 மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்
பரந்துபடு மனைதொறும் பாத்திர மேந்தி
யரங்கக் கூத்திசென் றையங் கொண்டது
நகுத லல்லது நாடகக் கணிகையர்
தகுதி யென்றார் தன்மை யன்மையின்
உரு மன்னவன் மகனே யன்றியு மாதரா
லிந்நக ருறூஉ மிடுக்கணு முண்டா
லும்பளந் தழீஇய வுயர்மண னெடுங்கோட்டுப்
பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
ந0 விளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற

---

கசு. தொன்று - பழமை.

கஅ. மாபெருந்தேவி, விளி. மாதர் - நாடகக்கணிகைகள்.

கஎ - அ. மாதரெல்லாருள்ளும் யானுறுதுன்பம் யாவரும்பட்டிலரென இயைக்க.

கக. பூவிலை - அற்றைப்பரிசம்; "பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்" (சிலப்: ரு: ருக.) ஈத்தவன் - கோவலன்.

உ0. மாதவர்பள்ளி - சங்கத்தாரான அறவணவடிகளுறையுமிடம்.

உஉ. அரங்கக்கூத்தி - மணிமேகலை.

உக - உ. அரங்கக்கூத்தி, பாத்திரமேந்திச் சென்று மனைதொறும் ஐயங்கொண்டதும்.

உ0 - உச. அடைந்ததும் கொண்டதும் நகுதற்குக் காரணமாவன வேயன்றி நாடகக்கணிகையர்களுடைய இயல்பன்மையால் அவற்றை அவர்க்குத் தகுதியென்று கூறார்; இனி 'நாடகக்கணிகையர்' என்பதை எழுவாயாகக் கொண்டு அவர் தகுதியென்றாரெனினுமமையும்.

உரு. மன்னவன் மகனேயன்றியும் - உதயகுமரனுக்கு உண்டான இடுக்கணல்லாமலும். மாதரால் - மணிமேகலையால்.

உசு. இடுக்கண் - துன்பம்.

உஎ. உம்பளம் - உப்பளம்; விகாரம். கோடு - கரை.

உஅ. கானல் - கடற்கரைச்சோலை.

உக. நெடுமுடிக்கிள்ளி: ஓர் அரசன். முன்னா - முன்னாக.

ந0. இறுப்ப- தங்குதலால். இறும்பூது - அதிசயம். இறுப்பச்சான்ற.

(பி - ம்.) கஅ. 'மாதர்யாவரும்', 'மாதர்யாவளாயினும்'

பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
வின்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ னறியான் மயக்க மெய்தாக்
ருடு கண்ட கண்ணினுங் கேட்ட செவியினு
முண்ட வாயினு முயிர்த்த மூக்கினு
முற்றுண ருடம்பினும் வெற்றிச்சிலைக் காமன்
மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
சo மலர்வா யம்பின் வாசங் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
வொருமதி யெல்லை கழிப்பினு முரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித் தனளவ் விளங்கொடி யென்றே

ருக. சோலை - சோலையில். ஒருசிறை - ஒருபக்கத்தில்.

ருஉ. தானேதமியள் - தான்தனித்தவளாய்.

உகூ - ருஉ. முன்னுத் தோன்றவென்க.

ருரு. ஈங்குளளாகிய இத்தன்மையையுடையாள் யாவளோவென்று.

ருச. அறியான் - அறியானுய். மன்னவன் மயக்கமெய்தி; 'மயக்க மெய்தா' என்பது இடக்கர்.

ருசு. வாயென்றது, நாவினை. உயிர்த்த - மோந்த.

ருஎ. உற்றுணருடம்பு - தீண்டியுணருமுடம்பு.

ருஅ. மயிலை - மல்லிகைவிசேடம். செயலை - அசோகு.

ருகூ. பயிலிதழ் - செறிந்த இதழ். சo. கமழ - கமழ்தலால்.

ருஅ - சo. மயிலை.முதலியனவாகிய அம்பெய்க.

ருடு - சo. கண்ணினும் செவியினும் வாயினும் மூக்கினும் உடம்பினும் காமனுடைய மலரம்பின் வாசங்கமழ்தலால். ஈண்டுக்கூறிய 'கண்டகண்' முதலியன அரசனுடைய பொறிகள்; என்றது, வேறுவேறுகாலங்களில் வேறு வேறுபொருள்களானனுபவிக்கப்படுவன ஒருகாலத்து அவள்கண்ணேயனு பவிக்கப்பட்டனவென்பதாம்.

சக. பலர் புறங்கண்டோன் - அரசன்.

சஉ. மதி - மாதம். கழிப்பினும் - கழித்தாளாயினும். உரையாள் - சொல்லாளாய்.

சரு. அந்நாள் - அந்நாளில்.

(பி - ம்.) ருரு. 'இன்னளையார்கொல்' சஉ. 'கழிப்பவுரையாள்'

௪௫ வேந்தரை யட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற
மன்னவ னவனை வணங்கி முன்னின்
றென்னுயி ரனையா ளீங்கொளித் தாளுள
௫௦ ளன்னா ளொருத்தியைக் கண்டிரோ வடிகள்
சொல்லுமி னென்று தொழுதவ னுரைப்பான்
கண்டிலே னாயினுங் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்
நாக நாடு நடுக்கின் றாள்பவன்
௫௫ வாகை வேலோன் வளைவணன் றேவி
வாச மயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நா
ளிரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தன

௪௫. தேர்வுழி - தேடும்பொழுது.

௪௬. நிலத்திற்குளித்து - நீரிற்புகுவதுபோல்நிலத்திற்புகுந்து. நெடு விசும்பேறி - சந்திரசூரியர்களையெட்டிப்பிடித்தற்குச்செல்வதுபோல் நீண்ட ஆகாயத்திற்சென்று.

௪௭. சலத்தில் திரியும் - பூமிமேல் நடப்பது போல் நீர்மேலே நடந்து திரியும்.

௪௬ - ௭. குளித்து ஏறித்திரியும்ஒருசாரணன்தோன்றவென்க. நிலத்திற் குளித்தல் முதலியன அற்புத சத்தியாகிய இருத்தியெனப்படும். தனது தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானமுண்டாக்குதற்பொருட்டு நிலத்திற் குளித்தல் முதலிய பலவற்புதங்களைப் புத்தன் காட்டினனென்று அசுவ கோஷபோதிசத்துவரென்பவராற் செய்யப்பட்டுள்ளபுத்தசரிதத்தின் ௧௯-ஆம் வர்க்கத்தாற் றெரிகின்றது; "நீரினிற் பூவில் வானி னினைத்துழி யொதுங்கு கின்ற, சாரண ரெண்ம ராவார் சமணரி லிருத்தி பெற்றோர்" (உ : ௪) என்றார் சூடாமணிநிகண்டுடையாரும்; "வானூடு புக்தோன்" (௧௦: ௩௩) என்று இந்நூலில் முன் வந்திருத்தல்காண்க.

௪௮. அவனை - அச்சாரணனை. ௫௦. அன்னாள் - அத்தன்மையாள்.

௪௮ - ௫௧. அவனை வணங்கி நின்று சொல்லுமினென்று மன்னவன் தொழுதவென்க.

௫௩. அறிவுடையேன் - அறிதலுடையேன். ௫௫. வாகை - வெற்றி.

௫௫ - ௬. தேவியாகிய வாசமயிலை. ௫௭. அந்நாள் - அந்நாளில்.

௫௯. கரு - கருப்பம். வரும் - வருவாள். கணி - நூல்வல்ல நிமித்திகன்.

௫௭ - ௯. அந்நாளிற் கணியெடுத்துரைத்தனன்.

(பி - ம்.) ௪௭. 'திரியுஞ் சாரணன் சென்ற' ௪௮ - ௯. 'முன்சென்றே, யென்னுயிர்' ௫௦. 'காணிரோ வடிகள்'

சு0 ஞங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப லிதுகேள்
டீவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயிறு புகூஉ
மணிமே கலைதன் வாய்மொழி யாலது
சுரு தணியா திந்திர சாபமுண் டாதலி
ஞங்குப்பதி யழிதலு மீங்குப்பதி கெடுதலும்
வேந்தரை யட்டோய் மெய்யெனக் கொண்டிக்
காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோண் மறவே லென்று
எ0 மாதவன் போயின வந்நாட் டொட்டுமிக்
காவன் மாநகர் கலக்கொழி யாதாற்
றன்பெயர் மடந்தை துயருறு மாயின்
மன்பெருந் தெய்வம் வருதலு முண்டென
வஞ்சினே னரசன் றேவியென் றேத்தி
எரு நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை
யென்மனைத் தருகென விராசமா தேவி
கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு

---

சு0. வரூஉமல்லது - வருவாளேயன்றி.

சுக. பூங்கொடி - மீலிவளை. புலம்பல் - வருந்தாதே.

சுஉ. தீவகச்சாந்தி - இந்திரவிழவு

சுங. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

சுச. மணிமேகலை - மணிமேகலாதெய்வம். அது - நகர்கடல்வயிறு புகுதல்.

சுஉ - ச. செய்யாநாளில்வாய்மொழியால்நகர்கடல்வயிறுபுகூஉமென்க.

சுச - ரு. இந்திரசாபமுமுண்டாதலின், அது தணியாது.

சுசு. ஆங்கு - அக்காலத்தே. பதியிரண்டில், முன்னது நகரம் பின்னது அரசன்.

சுஅ. காசு - குற்றம். சுகூ. மறவேல் - மறவாதே.

எ0. மாதவன் - சாரணன். எக. கலக்கு - கலங்குதல்.

எஉ. மடந்தை - மணிமேகலை. எங. தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

எரு. நாடகக்கணிகை - மணிமேகலை.

எசு. தருகென - தருவாயென்று சித்திராபதிகேட்ப.

எஎ. 'கள்ளும் பொய்யும்' என்பது முதலியன இராசமாதேவி கூற்று.

(பி - ம்.) சுசு. 'அழிதலுமூங்குப்பதிபுகுதலும்' எ0. 'மாதவனுரைத்த வந்நாட்' எஉ. 'துயருமாயின்' எரு. 'நஞ்சனையிறந்தநாடகக்கணிகை'

டுள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை
தலைமையாக் கொண்டநின் றலைமையில் வாழ்க்கை
அ0 புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
நின்னொடு போந்து நின்மனைப் புகுதா
ளென்னொ டிருக்குமென் றீங்கிவை சொல்வுழி
மணிமே கலைதிற மாதவி கேட்டுத்
துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோற்
அரு றெளியாச் சிந்தையள் சுதமதிக் குரைத்து
வளியெறி கொம்பின் வருந்திமெய்ந் நடுங்கி
யறவண ரடிவீழ்ந் தாங்கவர் தம்முடன்
மறவேன் மன்னவன் றேவிதன் பால்வரத்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
கூ0 மாதவி மகளு மாதவர்க் காண்டலு
மெழுந்தெதிர் சென்றாங் கிணைவளைக் கையாற்

---

௭அ. உரவோர் - அறிவுடையோர். துறந்தவை - நீக்கியவை.

௭௭ - அ. மணி. உஉ : கள0 - ௭உ.

௭கூ. தலைமையில் வாழ்க்கை - கடையான பரத்தைமைத்தொழில்; "மேலோ ராயினு நூலோ ராயினும், பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும், பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங், கணிகையர் வாழ்க்கை கடையே" (கக : கஅ0 - அ௩) என்றார் சிலப்பதிகாரத்தும்.

௭௭ - கூ. மணி. உ : ருள.

அ0. புலைமை - அசுத்தமுடையது. பூங்கொடி - மணிமேகலை.

அஉ. இருக்கும் - இருப்பாள். ஈங்கிவைசொல்வுழி - இவற்றை இராசமாதேவி சொல்லும்பொழுது.

இனி மணிமேகலையின் செய்தி கேட்டமாதவி அறவணவடிகளுடன் இராசமாதேவிபால் வருதல் கூறப்படும்.

அ௩. திறம் - காவலிலிருத்தல். திறத்தைக் கேட்டு.

அச. துணிகயம் - தெளிந்த நீர்நிலை. துளங்குதல் - கலங்குதல்.

அரு. சிந்தையள் - சிந்தையளாய்.

அசு. வளியெறிகொம்பின் - காற்றலலைக்கப்பட்ட பூங்கொம்புபோல.

அஉ - அ. ஈங்கிவை சொல்வுழி மாதவி கேட்டுத் தெளியாச்சிந்தையளாய் உரைத்து வருந்தி நடுங்கி வீழ்ந்து அவருடன் இராசமாதேவிபால் வரவென்க.

அகூ. பூ. மணி. உச : கசகூ. ஆயம் - சிலதியர்கூட்டம்.

(பி - ம்.) ௭கூ. 'தலைமையாநின்ற தன்மையில்'

றெழுந்தகை மாதவன் றுணையடி வணங்க
வறிவுண் டாகவென் றுங்கவன் கூறலு
மிணைவளை நல்லா ளிராசமா தேவி
கூறு யருந்தவர்க் கமைந்த வாசனங் காட்டித்
திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்
யாண்டுபல புக்கநும் மிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லை யாயினுந் தளர்ந்து
க00 மூத்ததிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினே னாயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்று
றிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
க0ரு பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை

கூச - கூ. நல்லாளாகிய தேவி ஆசனங் காட்டி விளக்கிச் சிறப்புச் செய்தபினென்க.

கூஎ. 'யாண்டு பலபுக்க' என்பதுமுதலியன இராசமாதேவிகூற்று.

கூஎ - அ. எனது நல்வினை இணையடி வருந்த நும்மை ஈங்கழைத்தது.

கூகூ. நாத்தொலைவில்லையாயினும் - நுமது நா மெலிதலில்லையாயினும், சொல்வன்மை குறைந்திலதென்றபடி.

க00. இவ்யாக்கையென்றது, அறவணவடிகளுடம்பை. என - என்று இராசமாதேவி சொல்ல.

கூகூ - க00. "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி, னுரைமூ தாளன்" (கஉ : ங - ச) என்று முன்னும் வந்திருத்தல் காண்க.

க0க. 'தேவிகேளாய்' என்பது முதலியன அறவணவடிகள் கூற்று. தவயாக்கை - தவவுடம்பு.

க0உ. வீழ்கதிர் - அத்தமிக்குஞ்சூரியன். மரணத்திற்குச் சூரியன் அத்தமித்தலை உவமை கூறுதல் பௌத்தநூன்மரபு; "சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (ங0 : க0உ - ங) என இந்நூலிற் பின்பு வருதல் காண்க.

க0ங - ச. பிறப்புப்பிணிமூப்பிறப்புக்கள் உடலுக்கியற்கையென்றபடி.

க0ரு - அ. பேதைமைமுதலிய பன்னிரண்டும் துவாதசநிதானமெனப்

(பி - ம்.) கூரு. 'காட்டத்' கூஎ. 'புக்கினுமிணையடிவருந்தக்' கூகூ. 'நாத்தொலைவில்லாயாயினுங்கிளர்ந்து' க00. 'மூத்தயாக்கை', 'மூத்தவிவ் யாக்கை' க0ச. 'இதுகெடப்'

பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
கக0 ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவி
னோதிய விவற்றை யுணரா து மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளித
கக௫ லுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு
மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
கஉ0 சொல்லப் பட்ட கருவினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கஉ௫ கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்

---

படும்; இவற்றினியல்பை, இந்நூல், ௩0 - ம் காதையால் விளங்கவுணர்க.

ககக. பேதைமை - அவிச்சை.

ககஉ. இவற்றை - துவாதசநிதானங்களை. ககச. கோடு - கொம்பு.

ககக - ச. பேதைமையென்பது மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்க.

கக௫. 'உலகமூன்றினும்' என்பதுமுதற் செய்கை கூறப்படும்.

கக௫ - கூ. உயிராமுலகம் அலகில - உயிராகிய உலகம் அளவில்லாதன. செய்கைகூறுதற்கு அங்கமாக எண்டு அறுவகையுயிர்களும் கூறப்பட்டன.

ககூ - அ. பேயுமென்றே அறுவகைத்தாகுமென்க.

கஉ0. சொல்லப்பட்ட கரு - மேற்கூறிய மக்கட்கருமுதலிய ஆறும்; "தெய்வக் கருவுந் திசைமுகக் கருவும்" (பதி. உஅ) என்று முன்புவந்திருத்தல் காண்க.

கககூ - உஉ. (செய்கை) இருவகையால் தோற்றிக் காட்டுமென்க.

கஉ௫. காமத்தீவிழைவு - காமமாகிய கொடிய விழைவு.

கஉ௫ - கூ. கொலையும் களவும் காமமுமென உடம்பிற்றோன்றுவன மூன்றும்.

(பி - ம்.) க0அ. 'இவ்வீராறும்' கக0. 'நரகடைகுவர்' கஉ0. 'பட்டார் பிறப்பினுட்டோன்றி' கஉ௫. 'தீவழக்கு'

பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
கரு0 றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
கருரு நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி
கச0 மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ
ரரைசன் றேவியொ டாயிழை நல்லீர்

---

கஉஎ. குறளை - கோள்.

கஉஎ - அ. பயனில் சொல் - அறம்பொருளின்பங்களுள் ஒன்றும் பயவாத சொல்.

கஉகூ. வெஃகல் - விரும்பல். வெகுளல் - கோபித்தல்; வெஃகல் முதலிய மூன்றும் முறையே காமம் வெகுளி மயக்கமெனப்படும்.

கரு0. உருப்பன - தோன்றுவன.

கஉரு - ருக. தீவினையென்பது, மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்துவகைப்படும்.

கருஉ. இத்திறம் - கொலைமுதலிய தீயவழிகளில். படரார் - செல்லார்.

கருஉ - ச. நீல. மோக்கல. கசு0. சமய. மேற். இக்கருத்து "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்களுர்த் தீவினை கடிமின்" (உரு: சக - உ) எனப்பின்னும் வருதல் காண்க.

கருகூ. சொல்லியபத்து - கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக்காட்சியென்பன.

கருஎ. சீலம் - பஞ்சசீலமுதலியன. கருகூ, மணி. உச: ககஎ.

கருஎ - கூ. நீல. மோக்கல. கசு0. சமய. மேற்.

கஉரு - ருகூ. நீல. புத்த. உஅ, சுரு. சமய. மேற்.

கச0. மகிழ்ச்சிவினை - நல்வினை. க0ரு - ச0. மணி. ரு0: சரு - அக.

கசக. ஆயிழைநல்லீரென்றது, மாதவியையும் சுதமதியையும் ஆயத்தையும்.

(பி - ம்.) கஉஎ. 'பயமில' கஉகூ. 'வெகுடல' கரு0 - ருக. 'மூன்றும், பத்துவகையெனப்' கருகூ. 'நீக்கி' கசக. 'அரசன்'

புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்
மறுபிறப் புணர்ந்த மணிமே கலைநீ
பிறவறங் கேட்ட பின்னாள் வந்துனக்
௧௪௫ கித்திறம் பலவு மிவற்றின் பகுதியு
முத்தேர் நகையாய் முன்னுறக் கூறுவ
லென்றவ னெழுதலு மிளங்கொடி யெழுந்து
நன்றறி மாதவ னல்லடி வணங்கித்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
௧௫௦ மாதவர் நன்மொழி மறவா துய்ம்மி
னிந்நகர் மருங்கின்யா னுறைவே னாயின்
மன்னவன் மகற்கிவள் வருங்கூற் றென்குவ
ராபுத் திரனா டடைந்ததற் பின்னாண்
மாசின் மணிபல் லவந்தொழு தேத்தி
௧௫௫ வஞ்சியுட் புக்கு மாபத் தினிதனக்
கெஞ்சா நல்லறம் யாங்கணுஞ் செய்குவ
லெனக்கிட ருண்டென் றிரங்கல் வேண்டா
மனக்கினி யீரென் றவரையும் வணங்கி
வெந்துறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த
௧௬௦ வந்தி மாலை யாயிழை போகி
யுலக வறவியு முதியாள் குடிகையு
மிலகொளிக் கந்தமு மேத்தி வலங்கொண்

௧௪௨. புரை - குற்றம். நல்லறம் - அருளறம்.

௧௪௪. பிறவறம் - மற்றைச்சமயதருமம்.

௧௪௫-௬. இத்திறம் பலவற்றையும் இவற்றின்பகுதிகளையுங் கூறுவேன்.

௧௪௭. இளங்கொடி - மணிமேகலை. ௧௪௯. மணி. உ௪; ௮௧.

௧௫௫. கண்ணகியைத்தரிசித்தற்பொருட்டு வஞ்சிநகரத்திற் புகுந்து.

௧௫௮. அவரையும்: உம், இறந்ததுதழீஇயது.

௧௬௦. அந்திமாலையில். ௧௬௧. முதியாள் குடிகை - சம்பாபதி கோயில்.

௧௬௨. கந்தம் - தூண்; என்றது, கந்திற்பாவையை; ஆகுபெயர்; "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" புறநா. ௫௨.

(பி - ம்.) ௧௪௨. 'நல்வினை போற்றிக்' ௧௪௪ - ௫. 'பின்னாளன்னைக்கு' ௧௪௬. 'முத்தொகையாக முன்னர்க்கூறுவன்' ௧௫௦. 'மறவாதுய்ம்மின்' ௧௫௨. 'இவள் கூற்றெனவுரைகுவர்' ௧௫௩. 'அடைந்தபின்னாள்' ௧௬௧. 'முதியாள் கோட்டமும்'

டந்தர மாருப் பறந்துசென் ருயிழை
யிந்திரன் மருமா னிரும்பதிப் புறத்தோர்
கசுரு பூம்பொழி லகவயி னிழிந்து பொறையுயிர்த்
தாங்குவாழ் மாதவ னடியிணை வணங்கி
யிந்நகர்ப் பேர்யா திந்நக ராளு
மன்னவன் யாரென மாதவன் கூறு
நாக புரமிது நன்னக ராள்வோன்
கஎ0 பூமிசந் திரன்மகன் புண்ணிய ராச
னீங்கிவன் பிறந்த வந்நாட் டொட்டு
மோங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணு மரனும் வளம்பல தரூஉ
மூண்ணின் றுருக்கு நோயுயிர்க் கில்லெனத்
கஎரு தகைமலர்த் தாரோன் றன்றிறங் கூறின
னகைமலர்ப் பூம்பொழி லருந்தவன் ருனென்.

உச.—ஆபுத்திரனுடனடைந்தகாதை முற்றிற்று.

---

கசுஙு. அந்தரம் ஆறு - ஆகாயமேவழியாக ; மணி. சு: உகக.

கசுச. இந்திரன் மருமான் - புண்ணியராசன்; மருமான் -வழித்தோன் றல். பதி - நாகபுரம்.

கசுரு. அகவயின் - உள்ளிடத்தே. கசுசு. மாதவன் - தருமசாவகன்.

கசுஅ. யாரென-யாரென்று மணிமேகலைகேட்ப. கூறும்-சொல்லுவான்.

கஎக. தொட்டு - தொடங்கி.

கஎஉ. பெயல் - மழை. பிழைப்பு அறியாது - தவறுதலையறியாது.

கஎஙு. தரூஉம் - கொடுக்கும். கஎச. உயிர்களுக்குநோயில்லை.

கஎரு. தாரோன் -புண்ணியராசன். கஎசு. அருந்தவன் -தருமசாவகன்.

க-கஎசு. தொன்முதுகணிகை கேட்டு வருந்தி வீழ்ந்து, ஏத்தி, 'தருக' என, இராசமாதேவி ஈங்கிவை சொல்வுழி, மாதவி அறவணவடிகளுடன் வர, காண்டலும், எதிர்சென்று துணையடிவணங்க, அவன், 'அறிவுண்டாக' என்றுகூறலும், இராசமாதேவி காட்டி விளக்கிச் செய்தபின், 'வாழ்க' என, 'தேவி கேளாய் ; நல்லீர் கேண்மின் ; மணிமேகலை முன்னுறக்கூறுவல்' என்று அவனெழுதலும், இளங்கொடி எழுந்து வணங்கி என்று வணங்கிப் போகி ஏத்தி வலங்கொண்டு சென்று இழிந்து பொறையுயிர்த்து வணங்கி, 'யாது ? யார்' என, மாதவன் கூறும் ; அங்ஙனங் கூறுமருந்தவன் கூறி னனென வினைமுடிவுசெய்க.

இருபத்தைந்தாவது

# ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை.

[இருபத்தைந்தாவது மணிமேகலை ஆபுத்திரனை மணிபல்லவத்திடையழைத்துப் புத்தபீடிகைகாட்டிப் பிறப்புணர்த்தி வஞ்சிமாநகர்புக்கபாட்டு.]

அரச னுரிமையோ டப்பொழில் புகுந்து
தரும சாவகன் றன்னடி வணங்கி
யறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ்
ரு சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு
மாரிய னமைதியு மமைவுறக் கேட்டுப்
பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்
கண்ணிணை யியக்கமுங் காமனோ டியங்கா
வங்கையிற் பாத்திரங் கொண்டறங் கேட்கு

---

க. அரசன் - புண்ணியராசன்; உரிமை - மனைவி; "உரிமை முன் போக்கி யல்லா லொளியுடை மன்னர் போகார்" சீவக. உஎஉ.

உ. தருமசாவகனென்பது, அப்பொழிலில் றோற்று வதியும் ஒரு முனிவன் பெயர். இட்பெயர்க்குத் தருமங்கேட்பவ னென்பது பொருள்.

ங. மறன் - பாவம். அநித்தம் - அநித்தியப் பொருளின்வகை.

ங - ச. நித்தத்திறன் - நித்தியப்பொருளின்வகை. துக்கம் - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, விரும்பியனபெறாமை, வேண்டாதன பெறுதல் என்னுமாறும். புக்கில் - புகுமிடம்.

ரு. சார்பிற்றோற்றம் - பேதைமைமுதலியபன்னிரண்டுநிதானத்தினது தோற்றம். உய்தி - பிழைத்தல்; "செய்தி கொன்றோர்க் குய்தியில்" (புறநா. ங௪); "உய்திக் கால முரையீ ரோவென" சிலப். கo: உ௪o.

௬. ஆரியன் - ஆசிரியன்; என்றது புத்தனை. எ. பெருவனப்பு - பேரழகு.

அ. இயக்கம் - இயங்குதல்; இவ்வடியோடு "உருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப" (ரு: ௬) என்று முன்வந்தது ஒப்புநோக்கற்பாலது.

(பி - ம்.) ௬. 'அறிவுறக் கேட்டு' ௯. 'அங்கை பாத்திரங்'

௧௦ மங்கிணை யில்லா ளிவள்யா ரென்னக்
காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போ
னுவலந் தீவின் நங்கையை யொப்பார்
யாவரு மில்லை யிவடிற மெல்லாங்
கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
௧டு கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்
மாதவ னறவண னிவள்பிறப் புணர்ந்தாங்
கோதின னென்றியா னன்றே யுரைத்தே
னாங்கவ ளிவளவ் வகனகர் நீங்கி
௨௦ யீங்கு வந்தன ளென்றலு மிளங்கொடி
நின்கைப் பாத்திர மென்கைப் புகுந்தது
மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியா
யப்பிறப் பறிந்திலை யாயினு மாவயிற்

---

௧௦. யாரென்ன - யாரென்று அரசன்கேட்ப.

௧-௧௦. அரசன் புகுந்து வணங்கிக் கேட்டு, 'இவள்யார்' என்னவென்க.

௧௧. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஞ்சுகன் மணிமேகலையின் வரலாற்றை அரசனுக்குக் கூறுதல் இனிக் கூறப்படும்.

௧௩. இவள் திறமெல்லாம் - இவளுடைய வரலாறு முழுதும்.

௧௪. கிள்ளிவளவனென்றது, உதயகுமரன்தந்தையை. கெழுதகை - உரிமை ; என்றது, நட்பை.

௧௬. காவிரிப்படப்பைநன்னகர்-காவிரியைத்தோட்டக்கூற்றிற்கு எல்லையாகவுடையகாவிரிப்பூம்பட்டினம் ; படப்பை - பக்கமுமாம் ; "காவிரிப் படப்பைப் பட்டினம்" சிலப். ௧டு: ௧டு௧.

௧௮. அன்றே - யான் போய்வந்த அக்காலத்தே.

௧௩-௮. இவடிறமெல்லாம் அன்றே யுரைத்தேன்.

௨௦. இளங்கொடி - மணிமேகலை.

௧௧-௨௦. உரைப்போனாகிய கஞ்சுகன் 'ஈங்குவந்தனள்' என்றலும்.

௨௧. 'நின்கைப் பாத்திரம்' என்பது முதலியன, புண்ணியராசனை நோக்கி மணிமேகலை கூறுங்கூற்று. பாத்திரம் - அமுதசுரபி.

௨௨. செல்வத்து - செல்வத்தால்.

௨௩. அப்பிறப்பு - போனபிறப்பு ; என்றது, சாலிவயிற்றிற்பிறந்த பிறப்பை.

(பி - ம்.) ௧௮. 'ஓதினனெறியானன்றே' ௧௯. 'ஆங்கவடானவ்வகநகர்'

றிப்பிறப் பறிந்திலை யென்செய் தனையோ
உரு மணிப்பல் லவம்வலங் கொண்டா லல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியா
யாங்கு வருவா யரசநீ யென்றப்
பூங்கமழ் தாரோன் முன்னர்ப் புகன்று
மையறு விசும்பின் மடக்கொடி யெழுந்து
ங0 வெய்யவன் குடபால் வீழா முன்னர்
வானின் றிழிந்து மறிதிரை யுலாவும்
பூநா றடைகரை யெங்கணும் போகி
மணிப்பல் லவம்வலங் கொண்டு மடக்கொடி
பிணிப்பறு மாதவன் பீடிகை காண்டலும்
ஙரு தொழுதுவலங் கொள்ளவத் தூமணிப் பீடிகைப்
பழுதில் காட்சி தன்பிறப் புணர்த்தக்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
தருமங் கேட்டுத் தாடொழு தேத்திப்
சO பெருமகன் றன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
விலங்கு நரகரும் பேய்களு மாக்கும்

---

உசு. பிணிப்பு - பற்று. பெற்றி - தன்மை.

உஎ. ஆங்கு - மணிபல்லவத்திற்கு. நீ ஆங்கு வருவாயென்று.

உஅ. தாரோன் - புண்ணியராசன். உO-உஅ. இளங்கொடி புகன்று.

உகூ. மடக்கொடி - மணிமேகலை.

ஙக. இழிந்து - இறங்கி. ஙச. மாதவன் - புத்தன்.

உகூ - ஙச. மடக்கொடி எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு காண்டலுமென்க.

ஙசு. பழுது - குற்றம். ஙரு - சு. பீடிகைக்காட்சி உணர்த்த.

ஙஎ. அடைகரை - அடைகரையிலுள்ள.

ஙஅ. மாதவன் - பிரமதருமன்.

ஙகூ. 'தருமங்கேட்டு' என்பது முதலியன, பிரமதருமனை முன்னிலையாக்கி, மணிமேகலை கூறுங்கூற்று.

சO. பெருமகன் - அரசன்; என்றது அத்திபதியை. பெயர்வோர்க்கெல்லாம் - அவந்தி நகரத்திற்குச்செல்வோரெல்லோருக்கும்.

(பி - ம்.) உசு. 'பெற்றிமையுணராய்' உஅ. 'முன்னர்ப் பொருந்தி' ஙரு. 'கொள்ளத்தூமணிப்' ஙசு - எ. 'பிறப்புணர்ந்த, சாயங்கரை'

கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தாற்
றேவரு மக்களும் பிரமரு மாகுதி
ராகலி னல்வினை யயரா தோம்புமின்
சரு புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ
னுலகுயக் கோடற் கொருவன் றோன்று
மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல
தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை
மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம்
ருO போற்றுமி னறமெனச் சாற்றிக் காட்டி
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீ
ரவ்வுரைகேட்டுநும் மடிதொழு தேத்த
வெவ்வுரை யெங்கட்கு விளம்பினி ராதலிற்

---

சஉ. கலங்கஞர்த்தீவினை - கலங்குதற்குக் காரணமாகிய துன்பத்தை யுண்டாக்கும் கொலைமுதலிய பத்துவகையினதாகிய பாவத்தை.

சச. நல்வினை - கொல்லாமை முதலிய பத்துவகையினதாகிய புண்ணியத்தை. அயராது ஓம்புமின் - மறவாது பாதுகாத்திடுமின்.

சரு. புலவன் - ஞானி; புத்தனென்பது இப்பொருட்டு. முழுதும் பொய்யின்றுணர்ந்தோன் - ஸர்வஜ்ஞன்.

சசு. உலகுயக் கோடற்கு - உலகைப் பிழைப்பித்தற் பொருட்டு; ஏகதேவனென்பது புத்தன் பெயர்களுள் ஒன்றாதலின், இங்கே 'ஒருவன்' என்றார்.

சரு - சசு. புலவனும் உணர்ந்தோனுமாகிய ஒருவன் உலகை உயக்கோடற்குத் தோன்றுமென்க.

ச௭. அவனறம் - அவனாற் கூறப்படும் அறம்.

சஅ. இன்னா - துன்பம். இழுக்குநரில்லை - தப்புவோரில்லை.

சகூ. மாற்றருங் கூற்றம் - பிறரால் தடுத்தற்கரிய இயமன்; "மாற்றருங்கூற்றம்" (தொல். புறத்திணை. சூ.உச); "மருந்தில் கூற்றம்" புறநா. ௩.

ருO. அறம் போற்றுமினென்று சொல்லிப் பொருளை விளங்கச் செய்து; சாற்றி - நிறைத்தென்றுமாம்; "நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி" மதுரை. உசசு.

ருக. நாவே கடிப்பாக வாயாகியபறையை அறைந்தீர்; கடிப்பு - பறையடிக்குங் குறுந்தடி; "நாக்கடிப் பாக வாய்ப்பறை யறையினும்" சிலப். கச: உகூ.

சO - ருக. பெயர்வோர்க்கெல்லாம் சாற்றிக் காட்டி அறைந்தீரென வியைக்க.

ருரு. வெவ்வுரை - பதினாறுநாளில் இராகுலன் திட்டிவிடமென்னும் பாம்பாலிறப்பானென்றும், நீ அவனோடு தீயில் மூழ்குவையென்றுஞ் சொன்னசொற்கள்; இதனை, இந்நூல் கூ-ஆம் காதை, சஅ ஆம் அடிமுதலியவற்றாலுணர்க.

(பி - ம்.) சசு. 'உலகுயக் கேட்டற்கு'

பெரியவன் றோன்று முன்னரிப் பீடிகை
௫௫ கரியவ னிட்ட காரணந் தானு
மன்பெரும் பீடிகை மாய்ந்துயிர் நீங்கிய
வென்பிறப் புணர்த்தலு மென்னென் றியான்றொழ
முற்ற வுணர்ந்த முதல்வனை யல்லது
மற்றப் பீடிகை தன்மிசைப் பொறாஅது
௬௰ பீடிகை பொறுத்த பின்ன ரல்லது
வானவன் வணங்கான் மற்றவ் வானவன்
பெருமகற் கமைத்துப் பிறந்தார் பிறவியைத்
தரும பீடிகை சாற்றுக வென்றே
யருளின னாதலி னாயிழை பிறவியு
௬௫ மிருளறக் காட்டு மென்றெடுத் துரைத்த
தன்றே போன்ற தருந்தவர் வாய்மொழி
யின்றெனக் கென்றே யேத்தி வலங்கொண்
டீங்கிவ ளின்னண மாக விறைவனு

---

௫௪. பெரியவன் - புத்தன்; பீடிகை - பீடிகையை.

௫௫. கரியவன் - இந்திரன்; "தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை" (அ: ௫௨) என்று முன்பு வந்திருத்தல்காண்க.

௫௫ - ௭. காரணந்தானும் உணர்த்தற்குக்காரணமும் என்னவென்று யான்தொழ.

௫௮. முற்றவுணர்ந்த முதல்வன் - எல்லாமறிந்தமுதல்வன்; ஸர்வஜ்ஞன்; மணி. ௫: ௧௦௧.

௫௯. பொறாஅது - சுமவாது; முற்று. ௬௧. வானவன் - இந்திரன்.

௬௨. பெருமகற்கமைத்து-புத்தனை அறிந்துகோடற்பொருட்டு இயற்றி. பிறந்தார்பிறவியை- பிறந்தோருடைய பழம்பிறப்பின் செய்தியை.

௬௩. சாற்றுக - உணர்த்துக.

௬௪. அருளினன் - ஆணைதந்தான். ஆயிழை பிறவியும் - உன்பிறவி யையும்.

௬௧-௪. அவ்வானவன் அமைத்துச் சாற்றுகவென்று அருளினனென்க.

௬௬. அருந்தவர், முன்னிலைக்கண்வந்தது. ௬௫. இருளற-மயக்கமற.

௬௫ - ௬. அன்று உரைத்ததாகிய வாய்மொழி.

௬௬ - ௭. எனக்கு வாய்மொழி இன்றைக்குரைத்தது போன்றதென்று.

௬௮. இவள் - மணிமேகலை; இன்னணமாக - இப்படி இங்கேயிருக்க. இறைவன் - புண்ணியராசன்.

(பி - ம்.) ௫௯. 'பீடிகைதன்மமிசைப்பெருஅப்' ௬௫ - ௬. 'மருளறக் காட்டுமென் றெடுத்துரைத்த, வன்றே'

மாங்கப் பொழில்விட் டகநகர் புக்குத்
௭௦ தந்தை முனியாத் தாய்பசு வாக
வந்த பிறவியு மாமுனி யருளாற்
குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ
ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமு
மாமுனி யருளான் மக்களை யில்லோன்
௭௫ பூமிசந் திரன்கொடு போந்த வண்ணமு
மாய்தொடி யரிவை யமரசுந் தரியெனுந்
தாய்வாய்க் கேட்டுத் தாழ்துய ரெய்தி
யிறந்த பிறவியின் யாய்செய் ததூஉம்
பிறந்த பிறவியின் பெற்றியு நினைந்து
௮௦ செருவேன் மன்னர் செவ்விபார்த் துணங்க
வரைசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி
நாடகங் கண்டு பாடற் பான்மையிற்
கேள்வி யின்னிசை கேட்டுத் தேவிய
ரூடற் செவ்வி பார்த்து நீடாது

---

௭௦. முனி - மண்முகமுனிவன்; மணி. க௫: ௪.

௭௩. அடர் - தகடு. ௭௨ - ௩. மணி. க௫: ௧௩ - ௪.

௭௧ - ௩. அருளால் அடங்கியவண்ணமும்.

௭௫. பூமிசந்திரன் - நாகபுரத்தரசன்.

௭௪ - ௫. இல்லோனாகிய பூமிசந்திரன்.

௭௬. அமரசுந்தரி - பூமிசந்திரன்மனைவி.

௬௮ - ௭௭. இறைவனும் விட்டுப் புக்குப் பிறவியும் அடங்கியவண்ணமும் போந்தவண்ணமும் கேட்டுத் துயரெய்தியென்க.

௭௮. இறந்தபிறவி - போனபிறப்பு. யாய் - தாய்; என்றது, சாலியை. இறந்தபிறப்பின் செய்தியை மணிமேகலையாலுணர்ந்தான்போலும்.

௭௯. பெற்றி - பேறு; என்றது, பசுவயிற்றிற்பிறந்தது முதலியவற்றை.

௮௦. செவ்வி - தம் குறைகூறுதற்கேற்ற மனமொழிமெய்கள் இனியனாங்காலம். உணங்க - வாட.

௮௧. வீற்றிருந்து - வருத்தமின்றியிருந்து; செம்மாந்திருந்தென்றுமாம்; (முருகு. ௭௦.) புரையோர்ப்பேணி - பெரியோரைவழிபட்டு; அமைச்சர்களையும் புரோகிதர்களையும் விரும்பித் துணைக்கொண்டென்றுமாம்.

௮௨ - ௩. பட்டினப். ௧௧௩.

௮௪. ஊடல - பிணங்கல்; 'வழக்காட்டு' என்பர் வெண்பாமாலை உரையாசிரியர். நீடாது - தாமதியாமல்.

(பி - ம்.) ௭௨. 'மாலை சூடியாங் கோர்' ௭௬. 'அரிவையாசுந்தரியெனும்'

அரு பாடகத் தாமரைச் சீறடி பணிந்து
தேமரு கொங்கையிற் குங்கும மெழுதி
யங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி
நறுமுகை யமிழ்துறூஉந் திருநகை யருந்தி
மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்
கூ0 கருப்பு வில்லி யருப்புக்கணை தூவத்
தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
தூவறத் துறத்த னன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதனென் செவிமுத லிட்டவித்
தேத மின்று யின்று விளைந்தது
கூரு மணிமே கலைதான் காரண மாகவென்
றணிமணி நீண்முடி யரசன் கூற
மனம்வே றாயினன் மன்னென மந்திரி

---

அரு. பாடகம்-ஒருவகைக்காலணி. அசு. குங்குமம்-குங்குமச்சாந்து.

அஎ. அங்கையிற் - அகங்கையினாலே. துறுமலர் - நெருங்கிய மலர். அங்கையிற்சூட்டி.

அஅ. முகை - அரும்பு; நறுமுகை போலுந் திருநகை.

கூ0. கருப்புவில்லி - மன்மதன். அருப்புக்கணை - மொட்டாமலராகிய அம்பு. வில்லி கணையைத் தூவ.

கூக. காமக்கள்ளாட்டு - காமமாகிய கள்ளையுண்டு விளையாடும் விளையாட்டு (மணி. ௨ : ௬0); "காமக் கள்ளாட் டடங்கினர் மயங்க" சிலப். ௨௨ : கஉஎ.

அஉ - கூக. 'நாடகங்கண்டு' என்பது முதலியன காமக்கள்ளாட்டிற்கு அடை.

கூஉ. தூவறத்துறத்தல் - பற்றுக்கோடறத்துறத்தல்.

கூக. நாதன் - தருமசாவகன். முதல் - இடம். வித்து - அவன்கூறிய உபதேசமொழி.

கூச. ஏதமின்றாய் - குற்றமில்லாமல.

கூரு. நீண்முடி - தொன்றுதொட்டுவந்தமுடி ; குலத்தின்பெருமை கூறியவாறு ; "நெடுமுடிக் குருசில்" (சீவக. உருச.) அரசன் - புண்ணியராசன்.

கூக - ரு. வித்து, மணிமேகலைகாரணமாக இன்று விளைந்ததென்று அரசன்கூற.

எஎ - கூரு. அரசன் துயரெய்தி நினைந்து இகழ்ந்து சாற்றிக் கூற.

கூஎ. மன் - அரசன்.

மேல்வருவன, சனமித்திரனென்னுமந்திரிகூற்று.

(பி - ம்.) அரு. 'சீறடிபிடித்து' அஅ 'அமிழ்துறு திருநகை' கூ0. 'கருப்புவிலநங்கன்' கூஉ. 'துவரத்துறத்தல்'

சனமித் திரனவன் றுடொழு தேத்தி
யெங்கோ வாழி யென்சொற் கேண்மதி
க00 நுங்கோ னுன்னைப் பெறுவதன் முன்னாட்
பன்னீ ராண்டிப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய தாயது
க0ரு காய்வெங் கோடையிற் கார்தோன் றியதென
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணை
றோன்றிய பின்னர்த் தோன்றிய வுயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையா
தூனுடை யுயிர்க ளுறுபசி யறியா
கக0 நீயொழி காலை நின்னா டெல்லாந்
தாயொழி குழவி போலக் கூஉந்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
யுயர்நிலை யுலகம் வேட்டனை யாயி
னிறுதி யுயிர்க ளெய்தவு மிறைவ
ககரு பெறுதி விரும்பினை யாகுவை யன்றே

---

கூகூ. கேண்மதி - கேள் ; மதி, முன்னிலையசை.

க00. நுங்கோன் - பூமிசந்திரன்.

க0க. இப்பதிகெழுநன்னாடு - இந்நகரத்தினையுடையநல்லசாவகநாடு.

க0உ. கரந்து - மறைந்து. க0க - உ. மணி. கச: ருரு - சு.

க0ங. ஈன்றாள் - தாய். க0க - ச. நாடு தகைமையதாயது.

க0அ. பிழையாது - தப்பாமல். க0கூ. உயிர்கள் அறியா.

கக0. ஒழிகாலை - நீங்கியபொழுது. ககக. கூஉம் - கூப்பிடும்; முற்று.

கக0 - கக. "தாயி றூவாக் குழவி போல, வோவாது கூஉம்" (புறநா. ச); "புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கினின், மன்பெரு நன்னாடு வா யெடுத் தழைக்கும்" மணி. உரு: உங்சு - எ.

ககங. உயர்நிலையுலகம் - நிருவாணம் ; "வரனென்னும் வைப்பு" (குறள். உச.) வேட்டனையாயின் - விரும்பினுயாயின்.

ககச. இறுதி - மரணம். உயிர்கள் இறுதியெய்தவும்.

ககரு. பெறுதி - இலாபம்.

ககங - ரு. வேட்டனையாயின் விரும்பினையாகுவை.

(பி - ம்.) க00. 'நுங்கோனின்னை' க0உ - ங. 'வளங்கரந்த, தீன்றாள்' ககஉ. 'காக்கலொன்றுநீ' ககச. 'இறுதியுலகமெய்தவு மிறைவன்'

தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றான்
மதிமா றோர்ந்தனை மன்னவ வென்றே
முதுமொழி கூற முதல்வன் கேட்டு
கஉ0 மணிபல் லவம்வலங் கொள்வதற் கெழுந்த
தணியா வேட்கை தணித்தற் கரிதா
லரசு முரிமையு மகநகர்ச் சுற்றமு
மொருமதி யெல்லை காத்தனின் கடனெனக்
கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉ
கஉரு யிலங்குநீர்ப் புணரி யெறிகரை யெய்தி
வங்க மேறினன் மணிபல் லவத்திடைத்
தங்கா தக்கலஞ் சென்றுசார்ந் திறுத்தலும்
புரைதீர் காட்சிப் பூங்கொடி பொருந்தி
யரைசன் கலமென் றகமகிழ் வெய்திக்
கஙO காவலன் றன்னொடுங் கடற்றிரை யுலாவுந்
தேமலர்ச் சோலைத் தீவகம் வலஞ்செய்து

---

கககூ. தன்னுயிர்க்கு - தன்னுயிர் வருந்துதற்கு. ஓம்பும்-பாதுகாக்கும்.

ககஎ. மன்னுயிர் முதல்வன் - புத்தன். அறம் - காருணியம். ஈது - நீ துறந்து நிருவாணமடைதற்கெண்ணியது. ஈது முதல்வனறமுமன்று.

கககூ - எ. புத்தனை, 'பரதுக்கதுக்கன்' (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், க) என்று கூறியிருத்தல் காண்க.

ககஅ. மதி மாறோர்ந்தனையென்றான் ; பிறவுயிர்களின்வருத்தத்தை நீக்கக்கருதாது தன்பயனைக்கருதித் துறத்தற்கு எண்ணினமையால்.

ககக. முதல்வன் - புண்ணியராசன்.

கஎ - ககக. சனமித்திரன், மன் மனம்வேறாயினனென்று தொழுதேத்தி முதுமொழிகூற.

கஉஉ. மதி - மாதம்.

கஉச. கலஞ்செய்கம்மியர் - கப்பலில் தொழில்செய்வோர் ; "கலம் புணர் கம்மியர்" மணி. எ : எO.

கஉரு. புணரி - கடல்.

ககக - உசு. முதல்வன் அம்மொழியைக்கேட்டுக் காத்தல் நின்கடனெனக் கூறிக் கூஉய் எய்தி ஏறினனென்க.

கஉஎ. தங்காது - இடையேதங்காமல். இறுத்தலும் - தங்கலும்.

கஉஅ. புரை - குற்றம். காட்சி - அறிவு. பூங்கொடி - மணிமேகலை.

கஙO - ஙக. காவலன்றன்னொடும் வலஞ்செய்து.

(பி - ம்.) கஉச. 'கம்மியர் கடனெனக்கூஉய்'

பெருமகன் காணாய் பிறப்புணர் விக்குந்
தரும பீடிகை யிதுவெனக் காட்ட
வலங்கொண் டேத்தினன் மன்னவன் மன்னவற்
க௩௫ குலந்த பிறவியை யுயர்மணிப் பீடிகை
கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட
வென்பிறப் பறிந்தே னென்னிடர் தீர்ந்தேன்
றென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்
க௪0 மாரி நடுநாள் வயிறுகாய் பசியா
லாரிரு ளஞ்சா தம்பல மணைந்தாங்
கிரந்தூண் வாழ்க்கை யென்பால் வந்தோர்க்
கருந்தூண் காணா தழுங்குவேன் கையி
னுடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூரா
க௪௫ தேடா வமிய லெழுந்திது கொள்கென
வமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவா
யுணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்து

---

க௩உ. பெருமகன் - அரசன்; அண்மைவிளி.

க௨௮ - ௩௩. பூங்கொடி பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து காட்ட.

க௩௫. உலந்தபிறவி - போயபிறப்பில் நிகழ்ந்த செய்தியை.

க௩௭. மையறுமண்டிலம் - குற்றமற்ற கண்ணாடி; "வயக்குறு மண்டிலம்" கலி. உ௫.

க௩௫ - ௭. மண்டிலம்போலப் பீடிகை உலந்தபிறவியைக் காட்ட.

மேல்வருவன, பழம்பிறப்புணர்ந்த புண்ணியராசன் கூற்று.

க௩௯. கலை - வித்தை. க௪0. மாரிநடுநாள் - மழையையுடைய நடு இரவில்.

க௪உ. இரந்துண்ணுமுணவையே வாழ்க்கைப்பொருளாகவுடைய என் பால்வந்தோர் பொருட்டு.

க௪௩. அழுங்குவேன் - வருந்துவேன்; பெயர்.

க௪௪ - ௫. மணி. க௪: க௨ - ௩.

க௪௬. அங்கையின் - அழகிய கையினால்.

க௪௭. பவம் - கருமக்கூட்டம்.

க௩௯ - ௪௭. இவ்வடிகளிற்கூறப்பட்டுள்ள சரித்திரத்தை, இந்நூலில் க௪ - ஆம் காதை, ௩ - ஆம் அடி முதலியவற்றால் உணர்க.

க௪௮. உரைப்பொருள் - சொற்பொருள்.

(பி - ம்.) க௩௮ - ௯. 'என்னிடர் தீர்த்த, தென்' க௪௩. 'காணாதழுவேன்' க௪௫. 'ஏடாபரியல்'

மணிதிக ழவிரொளி மடந்தை நின்னடி
கருo தேவ ராயினும் பிரம ராயினு
நாமாசு கழூஉ நலங்கிளர் திருந்தடி
பிறந்த பிறவிகள் பேணுத லல்லது
மறந்து வாழேன் மடந்தையென் றேத்தி
மன்னவன் மணிமே கலையுட னெழுந்து
கருரு தென்மேற் காகச் சென்று திரையுலாங்
கோமுகி யென்னும் பொய்கையின் கரையோர்
தூமலர்ப் புன்னைத் துறைநிழ லிருப்ப
வாபுத் திரனோ டாயிழை யிருந்தது
காவற் றெய்வதங் கண்டுவந் தெய்தி
கசூo யருந்துயிர் மருந்துமுன் னங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய் வந்தனை
யந்நா ணின்னை யயர்த்துப் போயினர்
பின்னாள் வந்துநின் பெற்றிமை நோக்கி

---

கசகூ. மணி - பளிங்கு ; "மணிமரு டெண்ணீர்" (மலைபடு. உருo); முத்துமாம்.

கருக. நா மாசு - நாக்குற்றம். கழூஉம் - போக்கும்.

கருஉ. பிறவிகள் - பிறவிகள்தோறும். பேணுதல் - உட்கொண்டு வழிபடுதல்.

கருங. மடந்தை, விளி.

கசகூ-ருங. நின்னடிகளைப் பிறவிகடோறும் பேணுதலல்லது மறவேன்.

கருரு. உலாம் - உலாவும். கருசா. கரை - கரையில்.

கருங - எ. மன்னவன் ஏத்தி எழுந்து சென்று கரையில் நிழலில் இருப்பவென்க.

கருகூ. தெய்வதம் - தீவதிலகை.

கசூo. 'அருந்துயிர் மருந்து' என்பது முதலியன, தீவதிலகை புண்ணியராசனை நோக்கிக்கூறும் கூற்று. உயிர்மருந்து - சோறு.

கசூக. பெருந்துயர் - பசித்துயர். வந்தனை - வந்தாய்.

கசூஉ. அந்நாள் - போன பிறப்பில்; மதுரையிலிருந்து கப்பல் வழியே வந்து இத்தீவத்தை அடைந்த அந்நாளில். அயர்த்து - மறந்து. போயினர், பெயர்.

கசூங. பெற்றிமை-தன்மை; என்றது, "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்தமை" மணி. கச : கூரு.

(பி - ம்.) கருக. 'நாமுறைபுகழ்ந்தநலந்திகழ்திருந்தடி' கருஅ. 'ஆயிழைதன்னைக்' கசூo. 'மருந்துன்னங்கையிற்' கசூக. 'வருந்துயிர் நீக்கிய மறவோன்'

நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோ
கசுரு ரொன்பது செட்டிக ளுடலென் பிவைகா
ணாங்கவ ரிடவுண் டவருடன் வந்தோ
ரேங்கிமெய் வைத்தோ ரென்பு மிவைகா
ணூர்திரை தொகுத்த வுயர்மணல் புதைப்ப
வாய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழா
கஎ௦ லன்புடை யாருயி ரரசற் கருளிய
வென்புடை யாக்கை யிருந்தது காணாய்
நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை
கஎரு பலர்தொழு பாத்திரங் கையி னேந்திய
மடவர னல்லாய் நின்றன் மாநகர்
கடல்வயிறு புக்கது காரணங் கேளாய்

---

கசு௪. நின்குறியிருந்து -நீ இறந்தவிடத்து உண்ணாநோன்புடனிருந்து; குறி - இடம்.

கசுசு. ஆங்கவரிடவுண்டு - அவ்வொன்பது செட்டிகளும் உணவளிக்க வுண்டு.

கசுஎ. மெய்வைத்தோர் - உயிர்நீங்கினோர்; மணி. ௬ : கநக.

கசு௮. ஊர்திரை தொகுத்த - பரந்த அலைகள் திரட்டிய.

கசுகூ. ஆய்மலர் - அழகியமலர். கீழால் - கீழிடத்தே ; உருபுமயக்கம்.

கஎ௦. அன்பையுடைய அரியவுயிரை உனக்குக் கொடுத்த. ஆருயிரென்றது, ஈண்டு விஞ்ஞானஸ்கந்தத்தை.

௧எக. காணாய் - பாராய்.

கசு௮ - எக. புதைப்பக் கீழால் யாக்கையிருந்தது காணாயென்க.

கஎ௦ - எக. இவ்வடிகளோடு, "அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போ டியைந்த தொடர்பு" (குறள். எ௩) என்பது ஒப்புநோக்கற்பாலது.

கஎ௪. கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன்; "கொலைவன் யார் கொலோ கொலைவன் மற்றிவன்" புறநா. கருஉ.

கஎஉ - ௪. 'நின்னுயிர் கொன்றாய்' என்பது முதலியன வஞ்சப் புகழ்ச்சி.

கஎரு. 'பலர்தொழுபாத்திரம்' என்பது முதலியன, தீவதிலகை மணிமேகலையைநோக்கிக் கூறுங்கூற்று.

கஎசு. நகர் - காவிரிப்பூம்பட்டினம். கஎசு - எ. நகர் கடலிலழுந்திற்று.

(பி - ம்.) கசுசு. 'ஆங்கவர்மடவாரவருடன்வந்தோர்' கசு௮. 'ஊதை யீட்டிய வுயிர்மணல்' கஎசு. 'மடவரலாய'

